## 'UNCONTROLLED THIS "WILL" MEANS UNIVERSAL STRIFE FOR SURVIVAL BY DESTRUCTION OF ALL ELSE.'

*"Give me not O God, that blind, fool faith in my friend that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*" Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

'HITCH YOUR WAGON TO A STAR,"                "TO THINE OWN SELF BE TRUE."




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம் தத்ஸத்.]                [God is Love : Knowledge is Power : *Aum*

**"New Series"**      ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.**      **"Approved"**

புத்தகம். **23.**]      ராக்ஷஸ௵ கார்த்திகை௴, **1915**௵ நவம்பர்௴      [சஞ்சிகை **8.**

## 'UNCONTROLLED THIS "WILL" MEANS UNIVERSAL STRIFE FOR SURVIVAL BY DESTRUCTION OF ALL ELSE.'

### POWER.

### The Psychic Conditions of the Present War.

"Wars in the past have come about either from conflicts of Races, Castes or Creeds in the endeavour to secure monopolies of the land, or to command the Trade or the profits of production and distribution of the world's commodities, ; or finally from an uncontrolled expansion of the population in excess of the food-supply possible to be obtained.

In effect we have here, applied to masses of humanity, the psychic conditions common to every individual ; and which have been summed up by German professors as the leading instinct of all creation, " The will to power."

*Uncontrolled, this 'will' means universal strife for survival by destruction of all else.* But Religions all teach control of the will, by which the individual and the masses can co-exist by co-operation, instead of some surviving by destruction of others.

Religion teaches the doctrine of the 'useful Limit' (*Control*) of all desires, and the proper exercise of every power, for the harmonisation of the human will with that of the Creator; the first object of which is, the efficient and economical use of human effort for the work of the world: and not only for the work of an individual, or a particular mass of humanity.

Teutonic interpretation of 'the will to power,' combined with certain accidental causes, has led Germany to a cult of pure materialism, in which Religion has lost its dominating power,"

## THOUGHTS ON THE PRESENT WAR.

"The aggressive materialism which is characteristic of the rise and fall of empires, has now reached the stage in Europe when half the states are ranged against the other half in deadly warfare. The logical conclusion we may draw from the fact is, that the empires chiefly responsible for failure to keep the peace internationally must give way to a federal union of the whole of the Nationalitiesof the European Continent, with an organisation which will ensure the peace for the future.

This is the more imperative because the future will see the federation of the Continents of North and South America, Africa and Asia, for defensive purpose, against the aggressiveness of Europe, if the cult of materialism is to reign supreme.

The Engineer, the Mechanic, the Scientist and Financier have a great field before them wherewith to make humanity glad or sad, according as they can control the use to which their wits are put. We witness the abuse of their powers in the craze for power of a single (Teutonic) Caste.

Pepole who crave for power, often do not know when they have got it, or with what object, they should use it and how to set about it! The greatest power for good being exercised universally is that bequeathed to humanity by those who disclaimed the grasping of temporal power, who loved and protected the poor and the humble. It is this power which will conquer in the present or any other war. This is the power the Entente wills behind its action.

It is already taking effect in ways the Teutons little imagine or suspect, because it is God's will as expounded by the Christ. Secret service, Bribery and Treason to the neighbour have not the ghost of a chance against it; and the scientists of no nation can keep their secrets from those of another. Treachery and deceit are mere negations of the will to power demonstrating the unfitness of the person to exercise it, and the danger to himself, in con ceiving it.

Bismark, the statesman responsible for the diplomacy that led to the war against France in 1870, lived to see a *coup d'etat* by the present Emperor and his friends, (after his summary dismissal), which became possible by the Imperial constitution, which failed to place any real check on the German Emperor. The very thing Bismark cautioned the German people against, *viz.*, raising a general coalition against them has happened. . . . . . .

The enormous centralisation of power which the Kaiser has caused, by his own actions, and the desire of the military, and the Jews working the Finances, has led to a momentum of power that no one has been able to control, and least of all the Kaiser, who has been made a tool of by a certain Ring around him.

It is easy to trace the effect of this in speeches of the members of the Bureaux, when endeavours are being made, to lay down laws for the world, which it will in nowise accept.

The excuses put forward by the Berlin Bureaux for the fearful blunders committed by Germany in the policy and direction of the war serve the very good purpose of showing the world the impossibility of the Imperial regime."—*'Miles' in the "Wednesday Review."*

புஸ்தகம்-23.] [சஞ்சிகை-8.
"The Children's Favourite, the Teachers' Help, and the Parents' Guide."

ராக்ஷஸ வரு கார்த்திகை
விவேக  சிந்தாமணி
November December. 1915.

ESTABLISHED 1892

"பெற்றோர்கள் தாழவப்பர் பிள்ளைகளி லாசையுள்ளோர்
கற்றே மெனவுகந்து கற்பர் பின்னும்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னேஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

## "THE PSYCHIC CONDITIONS OF THE PRESENT WAR."

### யுத்தகாரணம் : மனோபாவ நிலைமை.

இச் சஞ்சிகையின் முதற் பக்கத்தில் இந்த யுத்தத்தில் சம்பந்தப்பட்டவர் மனோபாவ உண்மைகளைப்பற்றி ஆங்கிலேய வித்வான் ஒருவர் எழுதிய அபிப்பிராயத்தை யெடுத்து அச்சிட்டிருக்கிறோம். அதிலே பொதுவாய் சண்டைக்கெல்லாம் காரணம் இன்னதென்றும் வியஷ்டி பாவத்தில் உண்மையாயிருக்கிற மனோபாவமெல்லாம் சமஷ்டி பாவத்திலும் உண்மையாகவே நடந்து வருகிறதென்றும் "இச்சா சக்தி" (இஷ்ட சித்தி) ("the power to will") பலமே யெல்லா நன்மைக்கும் தீமைக்கும் காரணமா யிருக்கிறதென்றும தெளிவாய்க் கூறி யிருக்கிறார்.

"மண்கொட்டு, குந்தாலி, கடப்பாரை இவை யெல்லாம் வலிமைக்குப் பேர் போனவை: இவை யெல்லாவற்றிலும் வலிது இஷ்டம். இந்த இஷ்டம் தானே ஈசன் அருள் ஆகும்" என்று திருமூலர் சொல்லியிருக்கிறார். 'இஷ்ட சித்தியானது' (the power to will) சித்த விருத்தி ரூபமான ஆசையை அடக்கியாளுவதினாலும் ஈசுவரோபாசனையினாலும் பெறக்கூடியதோர் அற்புத சக்தி. இஃதுடன் 'அகத் தூய்மை' என்னும் ஹிருதய சுத்தியும் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் ஆபத்து விளைவது நிச்சயம். அகத்தூய்மை, ஜீவகாருண்யத்தினாலும் பரோபகார சிந்தை முதிர்வினாலுமே சித்திக்கத்தக்கது. சித்தவிருத்தி நிரோதனமாகிய 'ஆசையை அடக்கியாளல்' யோகஸித்திகளைப் பெற விரும்புகிறவர்களால் சாத்தியமாய் சாதிக்கப்பெறலாம். ஆனால் அந்த 'ஸித்தி சாதனங்களை' அவர்கள் நல்வழியில் உபயோகிப்பார்களோ தீவழியில் உபயோகிப்பார்களோ அது அவர்களுடைய 'ஹிருதய சுத்தி'யைப் பொறுத்தது. இராவணன் இஷ்ட சித்தி பெற்று திரிலோகாதிபதியாக ஆண்டான். ஹிருதயசுத்தி யில்லாமையினால் தீவழிச் சென்று அழிந்தான்.

இராமர்க்கு 'ஹிருதய சுத்தி' அவருடைய அவதார விசேஷத்தால் ஸ்வபாவமாகவே (அதாவது, பிறவிக்குணமாக) அமைந்திருந்ததினால் அவர் தம்முடைய அபார சக்தியை நல்வழியிலே உபயோகித்தார்.

உலகத்திலுள்ள சண்டை சச்சரவுகளுக்கெல்லாம் காரணமென்ன? 'மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை' யென்று பொதுவியல் கொண்டு வகுக்கப்பட்ட மூன்று ஆசையே எல்லாச் சண்டை சச்சரவுகளுக்கும் மூலகாரணமாம்.

மண்ணாசை யென்பதில் இராஜ்யத்தை யபகரித்தலும் வேறு தேசங்களில் குடியேறி அந்நாடுகளைக் கைப்பற்றுதலும் அடங்கும். பெண்ணாசை யென்பதில் காமம் வெகுளியிவற்றால் நேரும் பாதகங்களெல்லாம் அடங்கும். பொன்னாசை யென்பதில் வியாபார வர்த்தகாதி லோப மோக மத மாச்சரியாதி குணங்களால் உண்டாகும் பாதகங்களெல்லாம் அடங்கும்.

வியஷ்டி பாவத்தில் பிரதிகபர்களுள் உண்டாகும் சண்டை சச்சரவுகளெல்லாம் இந்த மூன்றுவித ஆசைகளை அடக்கியாளாமையினால் உண்டாவது போலவே சமஷ்டி பாவத்திலும் அதே காரணம் பற்றி ஜாதி, மத, தேச

த்தார்க்குள் நடக்கும் யுத்தங்களும் சண்டைகளும் உண்டாகின்றன.

ஆசையை அடக்கி யாளவேண்டுமென்று ஒவ்வொரு உண்மையான மதமும் போதிக்கிறது. ஆசையை யடக்கலே 'தவம்' ஆகும். தவத்தின் பலனல் உண்டாவது 'இஷ்டசித்தி' (the power to will). இந்த 'இஷ்டசித்தி'யைத்தானே 'யோகஸித்தி' யென்றும் சொல்லுவர் மேலோர். இஷ்ட சித்தி ஈசுவரானுக்ரகத்தினலே பெறற்பாலதாயினும், பத்மாசுரன் பாணசுரன், இராவணேசுவரன் போன்ற அசுரசுபாவம் (materialistic tendencies) உள்ளவர்கள் தபஸிருந்து ஈசுவரானுக்ரகத்தால் இஷ்டசித்தி வரன்பெற்று அதை ஈசுவரதர்மத்துக்கு விரோதமாகப் பிரயோகித்திருக்கிறார்கள். இதற்குத்தான் 'துர்விநியோகம்' என்று சொல்கிறது. இராவணேசுவரன் முதலான அசுரசுபாவமுள்ளவர்கள் 'இஷ்டசித்தி' யைப்பெற்று துர்விநியோகப் படுத்தினதுபோல, 'டியூடன்' ஜாதியார்களான ஜெர்மானியர் ('ப்ரஷ்யா' தேசத்தார் பிரதானஸ்தர்) 'இஷ்டசித்தியின்' மஹிமையையுணர்ந்து அதைக் கைப்பற்ற வேண்டிச்செய்த முயற்சியால் அசுரபாவ மிகுந்துள்ளவர்களாய்த்தானே இஷ்டசித்தி சாதனங்களைக் கையாண்டு ஒரு விதத்தில் சாத்தியம் கண்டுவிட்டார்கள். "தேளுக்கு மணியம்கொடுத்தால் நிமிஷத்துக்கொருதரம் கொட்டும்" என்கிற பழமொழிப்படி அவர்களுக்கு இஷ்டசித்தி சாதனங்கள் அமைந்தது எல்லாரையும் தங்கள் இஷ்டத்துக்குட் பட்டவர்களாகச் செய்துகொள்ள வேண்டுமென்கிற துராசையில்முடிந்து அதுகாரணமாக இப்பொழுதுண்டாயிருக்கும் 'பார் ஹதப்போர்' நேர்ந்திருக்கிறது என்பது அவ்வுருடைய தீர்மானம். இது உண்மைக்கு ஒத்ததாயிருக்கிறதெனபது நம்முடைய அபிப்பிராயம். ஆகையால் அவருடைய அபிப்பிராயத்தை நம்மவர்கள் ஆராய்ந்துணர்ந்தறியவேண்டி இந்த யுத்த விஷயமாய் அவர் பொதுவிற் சொல்லியிருப்பதை முதற் பக்கத்திலும், சிறப்பிலக்கணம் தழுவிச் சொல்லி யிருப்பதை 2-வது பக்கத்திலும் எடுத்து அச்சிட்டிருக்கிறோம்.

எல்லா ஆசையிலும் இஷ்டசித்தி யாசை பெரிது. அஹத்தூய்மை சித்தியாமல் இந்த எண்ணம் நிறைவேறப்பெறுகிறவர்கள் 'குரங்கின் கையில் கொள்ளிக்கட்டையைக் கொடுத்ததுபோல்' எல்லாருக்கும் தங்களுக்கும் ஆபத்து விளைப்பவர்களாவார்கள். ஆகையால்தான் 'இஷ்சித்தி' கைவந்தவர்களான சித்தர்கள் தனக்கென்று ஒன்றும் செய்வதில்லை. 'உருவிலாகும் வித்தியெல்லாம் உலகத்தோர்க்கே' யென்றபடி, அவர்கள் பரோபகார சிந்தை மேற்கொண்டு ஈசுவராஞ்ஞையை ஒட்டியே நடப்பார்கள். இதைக்குறிக்கவே "சித்தன்போக்கு சிவன்போக்கு" என்கிற பழமொழி நமக்குள் வழக்கத்தில் வந்திருக்கிறது.

## AN APPEAL TO OUR READERS.

## விவேகசிந்தாமணியை வாசிப்போருக்கு ஒரு விண்ணப்பம்.

சென்ற சஞ்சிகையில் "நாட்டுப்புறத்தார்க்குபயோகமான வித்யாசீர்திருத்தம்" என்னும் தலைப்பின் கீழ் நமக்குத்தோன்றிய முக்கியமான சிலவிஷயங்களையும் அபிப்பிராயங்களையும் வெளியிட்டெழுதி யிருந்ததோடு, அதே விஷயமாய் 'மதராஸ்மெயில்' பத்திரிகைக்கும், சென்னை 'ஹிந்து' பத்திரிகைக்கும் நமது அபிப்பிராயங்களைக் குறிப்பிட்டு இரண்டு கடிதங்கள் எழுதியிருந்தோம். அன்றி 1913-ம் வருஷத்தில் இது விஷயமாய் எழுதியிருந்த விஷயங்களையும் சேர்த்தச்சிட்டு 1898-ம் வருஷம் நாம் சாங்கோபாங்கமாய் வெளியிட்டெழுதிய வியாஸங்களுக்கு முகவுரையாக மெயில் பத்திரா சிரியர் மிஸ்டர் ஹென்றிபீசம் அவர்கள் எழுதியிருந்த அபிப்பிராயத்தையும், பம்பாய் ஹைகோர்ட் ஜட்ஜாயிருந்த கனம மிஸ்டர் மஹாதேவ கோவிந்த ரானடே அவர்கள் நமக்கு எழுதியிருந்த கடிதத்திலடங்கிய அபிப்பிராயத்தையும் அச்சிட்டு பிரதமவித்யா சிக்ஷையில் அக்குஸை, அதிகாரம், சிரத்தை உள்ள எல்லாருக்கும் அவரவர்கள் அபிப்பிராயத்தைத் தெரிவிக்க வேண்டுமென்று பிரார்த்தித்து ஒரு கடிதமும் எழுதியனுப்பிவைத்திருக்கிறோம். பாலசிக்ஷை செய்யும் உபாத்தியாயர்களும் அதில் சிரத்தையுள்ள பெற்றோர்களும்கூட அவர்கள் அபிப்பிராயத்தை எழுதியனுப்பினல் பாலபோத சிக்ஷா சம்பந்தமான 'எடியுகேஷனல் கமிட்டி' யென்னும் வித்யா சங்கத்தார் அவர்களுக்கு நன்றி யுடையவர்களாயிருப்பார்களெனபதை இது மூலமாய் தெரிவித்துக்கொள்கிறோம்.

## THE NATURE AND METHOD OF THE PRESENT WAR.

"The War has been termed a "War of attrition." As such it has been sharply distinguished from all previous wars. The distinction is incorrect. Many wars of the past have been wars of attrition. The distinction is not in the method but in the thing "attrited." (Attrition—wearingdown by constant friction or rubbings). In the bulk of previous compaigns the thing 'attrited' has been the Army. Armies being defeated or captured no trained military force remains to resist the invader. Then the beaten ruler has capitulated. To-day "attrition" is not of armies but of nations: for the army and the nation are indistinguishable. And if the war is fought to a finish, not only the army, but a good part of the nation of the defeated Power will have ceased to exist.

"You can trace through history the passing of war from the manœuvering and skilled manipulations of trained armies, to this brutal slaughter, which may indeed prove the end of war, by war itself encompassing its own destruction.

"That is why the old strategy and tactic have ceased to exist; even the weapons of war are changing. You pound to pieces the sector of a line five hundred miles in length with high explosive shell. You don't aim especially at trench, artillery or enemies' 'detected presence.' You must deluge that sector with shell until you have blown the whole landscape to pieces; villages, railways, churches, forests, ploughed land and the remains of all human beings, vanishing as if ground to pulp by some gigantic mill. Then your men rush in on this scene of cosmic desolation armed with double sharpened knives, weighted sticks, bombs for throwing—and (save for prisoners) kill everything that still moves, concealed in cellars or underground. You have not reached your destination, for behind the sector you have thus converted into ruin and decay lies trench behind trench, and fortification behind fortification. But you bring up your artillery after a time, and perform the same act on another sector. You do not count the yards of the enemies' ground gained. You count the numbers of the enemies' soldiers killed. That is "attrition." It is a task utterly deficient in the ancient glories and intelligences of war. But when you have finished,—and sooner or later you must finish—you have not only defeated an army. You have—for a generation at least—almost destroyed a nation."—*The Nation.*

## இப்பொழுது நடக்கும் யுத்தத்தின் இயல்பும் முறையும்.

NATURE OF THF WAR: "ATTRITION,"
போரியில்: "தேய்பிறை வழக்குரை"—
'பார'தப்போர்.'

இப்பொழுது சென்ற 15-மாதங்களுக்கு மேலாக நடந்துவரும் மஹாயுத்தத்தை "பார் ஹதப்போர்"—'பார'தப்போர்' என்று நாம் குறிப்பிட்டுரைத்தோம். அந்தப் போர் அதற்கு இயல்பில் பொருந்தியதாக விருக்கிறது. இந்த யுத்தத்தை "War of Attrition" "பார' தப்போர்" என்று ஐரோப்பியரும் சொல்லிவருகிறார்கள்.

"SPIRITUAL IS GREATER THAN MATERIAL FORCE."
"எறும்பூரக் கல்லுந் தேயும்."

"எறும்பூரக் கல்லும் தேயும்" என்கிற பழமொழி கேட்டிருக்கிறீர்களே. அதன் அர்த்தம் என்ன? எறும்பு பார்வையிற் சிறியதும் அற்பமாய் நினைக்கக்கூடியதுமான ஜந்து வாயினும் அதன் சுறுசுறுப்பும் விடாமுயற்சியும் வியக்கற் பாலதாயிருக்கிறது. "கல்லும்" என்று சொன்னதனால், எறும்போடு ஒப்பிட்டுப் பார்க்கில் கல்லின் உறுதியும், வலிமையும், கனமும், உருவமும் மிகப் பெரிதாக விருந்தாலும், அற்பஜந்துவாகிய எறும்பு விடாமல் ஊறுவதினால் அதுவும் தேய்ந்துபோம் என்று வற்புறுத்திக் கூறினதாகிறது. இந்த உண்மையை உள்ளபடி உணர வேண்டுமானால் இந்த உவமானத்திலிருந்து உவமேயத்தின் தன்மையை கிரஹித்து உட்கொள்ள வேண்டும். எறும்பு உருவத்திற் சிறியதாயினும் அறிவுள்ள ஜந்து, அதாவது ஜீவன். கல் உருவத்திற் பெரியதாயினும் அறிவில்லாத ஜடவஸ்து. ஜடசக்தி பெரிதாகத் தோன்றினும் ஜீவசக்தியினால் அது தேய்வுறும். இதையே "Spiritual is greater than material force" என்று எமர்ஸன் சொல்லியிருக்கிறார்.

ஜீவசக்தி ஜடசக்தியைவிட ஏன் பெரிதென்று சொல்லவேண்டும்? என்று கேட்கில், அதற்குக் காரணம் இயல்பினுல் தானே விளங்கும். ஜீவன் வளர்பிறை வர்க்கத்தைச் சேர்ந்தது. அதற்கு அழிவில்லை. அப்படியென்றுல் ஜீவனை உபாதியாகக்கொண்ட சித்சக்திக்கு (அறிவுக்கு) அழிவில்லை: யென்று அர்த்தம். ஜடசக்தியோ அழிவுள்ளது. அழிவில்லாததொன்று அழிவுள்ளதொன்றை விடப் பெரிதுதானே. அஃதேபோல் தேஹம் அழிவுள்ளது; ஜீவன் அழிவில்லாதது. ஆதலால் தேஹத்தைவிட ஜீவன் பெரியது. சுருதியும் (வேதமும்) தேஹத்தை தேவாலயமாகவும் அதில் வசிக்கும் 'கேவல சீவனை' சிவமாகவும் சொல்லப்படுகிறதென்று முறையிடுகிறது.

"ATTRITION"

"தேய்பிறை வழக்குரை"

"Attrition" (அட்ரிஷன்) என்கிற பதத்துக்கு அர்த்தம் என்னவென்றுல் "எறும்பூரக் கல்லும் தேயும்" என்கிற தர்மத்தையொட்டித் தேய்பிறை வர்க்கத்தைச் சேர்ந்ததொன்றைத் தேய்ந்து அழிந்துபோகச் செய்தலுக்குச் சொல்கிறது. இதற்குச் சுருக்கமாய் "தேய்பிறை வழக்குரை" யென்று சொல்லலாம். "War of Attrition" என்பதைத் "தேய்பிறை யுத்தம்" என்று தமிழ்ப் படுத்தலாம். அதாவது சண்டை போடுகிற இருதாப்பாரில் ஒருவரோ இருவருமோ தேய்பிறைச் சந்திரனைப்போல் தேய்ந்து அவர்களுடைய அழியாத ஆத்மா (அறிவு) ஆகிய ஒன்றுமட்டும் மிஞ்சச் சண்டை யொழிவதாம். இதைத்தான் உருவகமாகப் "பார'தப்போர்" என்று சொன்னேம். இங்கே நமது புராணகதைகளில் ஒன்று ஏற்ற உதாரணமாக அமைவதால் அதைச் சுருங்கச் சொல்லி விளங்க வைப்போம்.

THE PARABLE OF THE MOON.

சந்திரன் கதை: (உவமானம்)

முன்னெருகால் சந்திரன் (மனதிற்கு அதிஷ்டான தேவதை) வியாழபகவானிடத்தில் ஞானேபதேசம் பெறவேண்டி குருகுலவாசம் செய்து வருகையில் குரு விதித்த சிக்ஷை தீக்ஷைகளில் தேறி குருவினுடைய அனுக்ரகம் பெற்று ஞானதிக்ஷை பெறுமல், தானுகமிஞ்சித் தாரகயோகத்தால் ஞானசாதனம் தேடி ஆத்மலாபம் (அழியாத பெறற்கரும் பேரின்பசுகம்) பெற யத்தனித்தான். ஹிருதய சுத்தியின்றி அழியாப்பேறு (ஆத்மலாபம்) பெற்றுல் அது இராவணுதி அசுரயோகிகள் விஷயத்தில் நேர்ந்ததுபோல் ஆபத்து விளைப்பதாய் முடியுமாதலால், முறைதப்பி குருவருள் பெறுமுன் ஆத்மலாபம் தேடிய குற்றத்திற்காக வியாழபகவான் சந்திரனை அவன் கலைகள் தேய்ந்துபோகச் சாபமிட்டனுப்பிவிட்டார். அந்தச் சாபம் பலிக்கவே சந்திரனுக்குள்ள கலைகளெல்லாம் தினம் ஒன்ருகத் தேய்ந்துவர அவன் ஒளியிழந்து அந்தகாரத்தில் மூழ்க விருந்தான். அச்சமயம் அவன் தனது குற்றத்தை நினைந்து மனமுருகிக் கருணைநிதியாகிய கடவுளைக் காத்தருளவேண்டுமென்று எஞ்சிநின்ற ஆத்மகலை (16-வது கலை) ஒன்றினுல் மட்டும் பக்தி பூர்வமாய் தியானிக்க, ஏழைக்கிரங்கியாகிய பகவான் அவனுடைய தீனஸ்திதியைக் கண்டு எஞ்சிநின்ற ஒரு கலையையும் அவருடைய திருமுடியில் புனைந்து இனித் தேய்ந்த கலைகளெல்லாம் தினம் ஒன்ருக வளருவதாகவென்று வரமளித்தார். சந்திரனுக்கு துர்ப்புத்தியொழிந்து சற்புத்தி யுண்டாக அவன் கலைகளும் தினமொன்ருக வளர்ந்து பூரணமாயின. ஆகியும் சிஷ்டாசாரத்துக்குக் கேடு வரக்கூடாதென்று வியாழபகவான் இட்ட சாபத்தை முற்றும் மாற்றிவிடாமல், பலித்தமட்டும் அது பலித்தது தான் என்று சொல்லி அவன் கலைகள் தேய்ந்து வளர்ந்து உலகுக்கு நல்வழிகாட்ட ஒருதாரணமாக விருக்கட்டுமென்று அனுக்ரகித்தார்.

[இதைத்தான் பாமரஜனங்கள் சந்திரன் குருபத்னியோடு வியபசரித்தான் என்றும், அதனுல் குருவினுடைய சாபம் பெற்று ஈசு

வாகிருபையால் விமோசன மடைந்தான் என்றும் சொல்லிவருகிறார்கள்].

இந்தப் புராணக் கதையினால் விளங்கும் நீதியென்னவென்றால்: சன்மார்க்கப் பிரவிர்த்தியே வளர்பிறை யொத்து விளங்குமென்றும் துன்மார்க்கப் பிரவிர்த்தி தேய்பிறையொத்து அழிவுறு மென்றும் உதாரணங்கொண்டு போதித்ததாக ஊகித்துணரத் தெரியவரும். இதை நம்மவர்களில் மேலோர் "தர்மம் தலை காக்கும்" என்றும் "அதர்மம் அழிவுறும்" என்றும் முதுமொழியாக வெடுத்தோதியிருக்கிறார்கள்.

'RIGHTEOUSNESS WILL TRIUMPH IN THE END.'

"தர்மம் தலைகாக்கும்"

"தர்மம் தலைகாக்கும்" என்றால் என்ன? 'தர்மம்' என்பது இயற்கைவிரோதமில்லாத கர்மப் பிரவிருத்தியைச் சுட்டிக் காட்டிநிற்க, 'தலை" என்பது சந்திரனுடைய "16-வது, கலைக்கு" ஒப்பான ஆத்ம க்ஷேமத்தைக் குறிப்பாலுணர்த்திநிற்கும். "எண்சாணுடம்புக்குச் சிரஸே பிரதானம்." அதுபோல தத்துவங்களி லெல்லாம் மேலானது பரதத்துவம். அது தான் ஜீவனுடைய அழியாத கலை. தேஹமுள்ளமட்டும் கர்மத்தைச் செய்யாமலிருப்பது அசாத்திய மாதலால், தர்மவழி பற்றிக் கர்மத்தைச் செய்யவேண்டும். தர்மங்களி லெல்லாம் மேலானது "அஹிம்ஸை"— பிறருக்குத் துன்பம் விளைக்காமை. பிறருக்குத் துன்பம் விளைக்காமலிருப்பது எப்பொழுது சாத்தியம்? ஜீவகாருண்யத்தால் எல்லாம் தானாக வுணரும்போதுதான் சாத்தியம். எல்லாந்தானாக வுணரும் உணர்ச்சிவந்தபொழுது இந்த எண்சாணுடலே "நான்" என்கிற அறியாமையால் வந்த உணர்ச்சி தேய்ந்து நசித்துப்போம். இந்த 'தேஹம் நான்' என்கிற பாவம் நசித்தால் 'எல்லாம் நான்' என்கிற பாவம் உதித்து வளர்பிறைச்சந்திரனைப்போல் வளரும். அதற்குத்தான் ஸம்ஸ்கிருதத்தில் "விருத்தி ஞானம்" என்று சொல்கிறது. அதாவது, மேன்மேலும் விசாலித்துப்பெருகும் அறிவு. இந்த அறிவு பெற்றவர்களே அரசியல் தர்மமுணரத்தக்கவர். அவர்கள் ராஜ்யபாரமே "ராமராஜ்யம்" என்னும் சிறப்புப்பெயர் பொருந்தப் பெறும். மற்றப்படி அஹம்பாவச் செருக்கால் "புத்திவிபரீத சாரதோஷம்" நீங்காமல் "வல்லான் வகுத்ததே வாய்க்கால்" என்று முரட்டு பலத்தால், இராவணாதிகளைப்போல் உலகைவென்று ராஜ்யபாரம் செய்வோர், எப்படியும் அதர்மவழியி லிறங்கி அழிவுறுவார்களென்பது நிச்சயம். ஆகையால் அவர்கள் ராஜ்யம்தானே "இராவணராஜ்யம்" என்று சொல்லப்படும். இப்பொழுது நடக்கும் சண்டையினால் "இக்கலியுகத்தில் இராமராஜ்யம் ஸ்திரமா? இராவணராஜ்யம் ஸ்திரமா?" என்றுதிக்கும் சந்தேகம் தீர உலகுக்கு உண்மை புணர்த்தும் காலம்வந்தது போல் தோற்றுகிறது. ஏனெனில் இந்த மஹாயுத்தம் காட்டுத்தீபோல் வரவர எங்கும் தொற்றித்தொடர்ந்து பரவிவருகிறது.

THE SPREADING OF THE CONFLAGRATION OF WAR.

"காட்டுத்தீபோல் பற்றிப் பரவிவரும் யுத்தம்."

ஜெர்மனி - ஆஸ்திரியாவைச் சுற்றியுள்ள தேசங்களெல்லாம் இச்சண்டையில் சம்பந்தப்பட்டுவிட்டன. முதலில் துருக்கி ஜெர்மனியைச் சேர்ந்து கொண்டதனால் ஐரோப்பாவில் நடந்த யுத்தம் ஆசியா கண்டத்திலும் பரவநேரிட்டு "ஆசியாமைனர்" (Asia-Minor) என்னும் பாகமும் போர்க்களமாக மாறியது. அங்கே நேர்ந்த சண்டைமுடியுமுன்னமேதானே தெற்கே இத்தலிக்கும் ஜெர்மனி-ஆஸ்திரியாவுக்கும் சண்டை நேரிட்டு விட்டது. இப்பொழுது "பால்கன்" தீபகர்ப்பத்திலுள்ள நாடுகளில் ஒன்றான பல்கேரியா ஜெர்மனியோடு சேர்ந்துகொண்டு "ஸேர்பியா" நாட்டை யெதிர்க்கத் தொடங்கியிருக்கிறது. இதனால் யுத்தகளம் ஐரோப்பாவிலிருந்து ஆசியாகண்டத்துக்கும் எகிப்துக்கும் பரவும்போலிருக்கிறதென்கிறார்கள். ஸேர்பியாதோற்றுபோனால் அந்நாட்டுவழிஜெர்மனியும்ஆஸ்திரியாவும்

பல்கேரியாவும் அவர்கள் சைனியங்களை துருக்கியின் சைனியங்களோடு சேர்த்துக்கொண்டு எகிப்து நாட்டையும் மேலக் கோடியிலுள்ள ஆசியாவின் முக்கிய பாகமாகிய 'டைக்ரிஸ்' நதி தீரத்தையும் (Tigris Valley) கைப்பற்றிக் கொண்டு அங்கிருந்த சண்டையை மேன்மேலும் கிழக்குநோக்கிவரச் செலுத்துவார்கள் போலும் தோன்றுகின்றது. ஆனால் அவர்கள் ஜயித்துவிடுவது சுலுபமென்று சொல்வதற்கில்லாமலிருக்கிறது.

'WONT-LEAVE' *vs.* 'WONT-GIVE'

"விடாமுண்டன் கோடாமுண்டன்"

"விடாமுண்டன் கொடாமுண்டன்கதையாக" இருதரத்தாரும் முனைந்து சண்டை போட்டு வருகிறார்கள். சண்டையென்றால் முன்காலத்துச் சண்டைகளைப்போல் இரண்டு சைனியங்களும் சண்டைபோட்டு மண்டையை யுடைத்துக்கொள்ள சண்டையில் சம்பந்தப்படாத ஜனங்கள் "இராமன் ஆண்டாலென்ன! இராவணனாண்டாலென்ன!" என்று அவர்கள் பாட்டைப்பார்த்துக்கொண்டு காலத்தைத் தள்ளிவந்தார்களென்று சொல்வதற்கில்லை.

THE METHOD OF WAR.

இச்சண்டையின் முறை.

இப்பொழுது நடக்கும் சண்டையின் முறை அதன் இயல்புக்குத் தக்கப்படி மாறுபட்டிருக்கின்றது. முன் சைனிய பலத்தைக்கொண்டு மட்டும் அரசர்கள் சண்டை செய்து வந்தார்கள். ஆகையால் ஒரு தரப்புச் சைனியம் முறியடிக்கப்பட்டால் அந்தப்பக்கத்து அரசன் கீழ்ப்படிந்து எதிரிக்கு உள்பட்டவனாகி வந்தான். இப்பொழுது தேசமெல்லாம் சைனியமாயிருக்கிறது. அதாவது, சண்டைசெய்யும் வயதுள்ளவர்களெல்லாம் இராணுவ சேவகம் செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் பற்றி இராணுவத்துக்கும் தேசப்பிரஜைகளுக்கும் வித்தியாசமின்றிப்போய்விட்டது. இது காரணத்தால் இச்சண்டையை முடிவுற நடத்தவேண்டுமென்றால், சண்டைபோடுகிற இருதரப்பாரில் ஒரு தரப்பாரோ இருதரப்பாருமோ அழிந்து நாசமானால்தான் சண்டை முடியும் போலிருக்கிறது. அது எப்படியென்றால்:—

500-மைல் விஸ்தீரணமுள்ள சண்டை முகம் இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். இவ்வளவு தூரத்துக்கு இரு தரப்பாரும் அங்கங்கேயெதிர்த்து நின்று போர்புரிந்து வருகிறார்கள். எப்படி போர் புரிகிறது? என்று கேட்டால்: அந்த விநோத முறையைச் சொல்லக்கேளுங்கள்:

"COSMIC DESOLATION"

"பிரளயகாலப் பெருவெளி."

இந்த 500-மைல்தூரமுள்ள சண்டைமுகத்தில் ஒரு பாகத்தையெடுத்துக்கொண்டு அங்கேயுள்ள நாடு நகர் கிராமம் கோயில் காடு உழுது பயிர்செய்த நிலம் முதல் எல்லாம் பாழாகும்படி வெடிகுண்டுகளைப் போட்டுத் தகர்த்து நீர்த்தூளி செய்து விடுகிறார்கள். பிரளயகாலப் பெருவெளிபோல் இப்படியாக்கப்பட்ட பொட்டை வெளியில் இராணுவங்களைப் புகவிட்டு அங்கே மிச்சம் மிகுதியுள்ளவைகள் ஆடோ, மாடோ, குதிரையோ, ஆணோ, பெண்ணோ, குழந்தையோ வங்குவளைகளில் எங்கேயிருந்து எது நகர்ந்தாலும் அவற்றைக் கொன்று நாசம் செய்துவிடுகிறார்கள். கைதிகளாகப் பிடித்தவர்களை மட்டும் கொல்லுவதில்லை. இவ்வளவு நீர்த்தூளிசெய்தும் காரியம் ஆனபாடில்லை. எனெனில் பாழாக்கப்பட்ட இடத்துக்குப்பின்னால் அகழ்கள் பத்தியாய் வெட்டப்பட்டு அவைகளில் சேனைகள் பதுங்கிக் கிடக்கிறார்கள். அவர்களுக்குப் பின் கோட்டைகள் ஒன்றின்பின் ஒன்றாய்க் கோர்வையாகச் சுற்றிக் கொண்டிருக்கின்றன. இவைகளை யெல்லாம் பழையபடி நீர்த்தூளி செய்ய வேண்டும். அதற்காகப் பாழ்செய்யப்பட்ட இடத்தில் பீரங்கிப்பட்டாளங்களைக்கொண்டு வந்து பாளையம் போட்டுக் கொண்டு அதற்கப்பாலுள்ள பாகத்தை மறுபடியும் வெடிகுண்டுகளினால் தகர்த்துப் பாழாக்குகிறார்கள்.

இப்படி இருதரத்தாரும் போட்டி போட்டுக்கொண்டு கீர்த்தூளி செய்யத்தலைப்பட்டிருக்கையில் எதிரியினுடைய இடத்தில் எவ்வளவுபற்றிக் கொண்டோம் என்று யாரும் சிந்திப்பதில்லை. கொல்லப்பட்ட இராணுவ வீரர்கள் எத்தனைபேர் என்று மட்டும் கணக்கெடுத்துக் கொள்கிறார்கள். இப்படியாக முன்னணி பின்னணிகள் ஒன்றின்பின் ஒன்றாக முன்னுக்கு வருகின்றன. அவை மடியவும் மூலஸ்தானத்தில் புதிதாகச் சேர்த்துள்ள ராணுவங்கள் தர்பீதுசெய்யப்பட்டு சண்டைமுகம் போகத்தயாராக விருக்கின்றன. இப்படியாக சண்டைபோடத்தக்கவர்களெல்லாரும் மாண்டு மடிந்து மண்ணுக்கிரையாகப் பாக்கியுள்ளவர்கள் குழந்தைகளும் ஸ்திரீகளும் தான் ஆவார்கள்.

இதற்கு முன் சரித்திரத்தில் நடந்திருக்கிற இம்மாதிரி 'பாரதப்போர்" இரண்டு மூன்றில் குழந்தைகளும் ஸ்திரீகளும் மாத்திரமாவது மிஞ்சவிட்டார்கள். இப்பொழுது நடந்து வரும் யுத்தமுறையில் இவர்களும் மிஞ்சுவது யுத்தம் நடந்த இடங்களில் அருமையாகி விடுமென்று தோன்றுகிறது.

GERMAN MILITARISM *vs.* ALLIES' DETERMINATION.

வல்லடிவழக்குச் சொல்லிடிவழக்குப் போராட்டம்.

இப்படிப்பட்ட சண்டை தொடுத்திருப்பதற்குக்காரணமென்ன வென்று கேட்டால் ஒவ்வொருவரும் எதிரிகள்மேல் பழிசுமத்திப் பேசுகிறார்கள். ஜெர்மானியர் வல்லடி வழக்குத் தொடுக்கிறார்கள். கூட்டாளிகள் உனக்கு நான் இளைத்தேனா பார்ப்போம் என்று சொல்லிடிவழக்குத் தொடுக்கிறார்கள். இப்படியாக இருதரத்தாரும் முனைந்து சண்டை தொடுக்க யுத்தம் காட்டுத்தீபோல் கண்டதை யெல்லாம் பற்றி விழுங்கிக்கொண்டு பரவிவருகிறது. இப்பொழுது 15-மாதங்களுக்கு மேலானாலும் யுத்தம் எப்படிமுடியுமென்று சொல்வது சாத்தியமாயில்லை. பல்கேரிய தேசத்தார் ஜெர்மனிகை ஜயிக்கலாமென்று அவர்கள் பக்கம் சேர்ந்து கொண்டதாகச் சொல்கிறார்கள். அவர்கள் எண்ணம் பலிக்குமென்று சொல்வதற்கு மில்லை. ஏனெனில் ஜெர்மானியர்கள் ஏராளமாக மனிதர்களையிழந்து வருகிறார்கள். அவர்களுடைய தேசத்து ஆண்மக்களில் அனேகமாய் சண்டைபோடும் திறமையுள்ளவர்களெல்லாம் சைனியத்தில் சேர்ந்திருப்பதோடு 17, 18-வயதுச் சிறுவர்களையும் சண்டையில் பழக்கி வருகிறார்களாம். இது உண்மையாயிருந்தால் இப்படி அவர்கள் தங்கள் தேசப்பிரஜைகள் இரத்தத்தைஆறாகப்பெருகவிட்டு வருவது எத்தனைகாலத்திற்கு சாத்தியமாய் வருமோவென்கிற சங்கை உதிக்கிறது. ஏற்கனவே அவர்கள் படை வலிகுன்றியிருக்கிறதாகச் சொல்கிறார்கள் சிலர். ஆயினும் அவர்கள் யந்திர தந்திர சூக்ஷ்மப்பிரயோகங்களால் எதிரியை மேலெழவிட்டாமல் மடக்கி முடக்கி வருகிறார்களென்றும் சிலர் சொல்கிறார்கள். உண்மையெப்படியோ பகவானுக்குத் தான் தெரியும்.

CARRYING THE WAR TO A FINISH.

'உண்டு இல்லை யென்று பார்க்கும் முடிவு.'

உண்மையெப்படியாயினும் இந்த நாசகாலப்போர் எப்படியும் ஒரு முடிவுக்கு வந்தே தீரவேண்டும். அப்பொழுது இச்சண்டையில் சம்பந்தப்பட்டவர்கள் எல்லாரும் தேய்பிறைச் சந்திரனைப்போல் ஒளிமங்கி இருள்மண்டி வலிகுறைந்து நிற்பார்கள் என்பது திண்ணம். ஆனால் யார் முற்றும் தேய்ந்தொழிவார்களென்றுசொல்லவாவது ஊகிக்கவாவது இன்னம் காலம் முந்தவில்லையென்று தெரிகிறது. உண்டு இல்லையென்று பார்த்து விடுகிறதொன்றே முடிவாகுமென்று இருதரத்தாரும் முனைந்து சண்டைசெய்து வருகிறார்களென்பது மட்டும் ஸ்பஷ்டமாயிருக்கிறது. 'எல்லாம் வல்ல கடவுள் எவ்வழிவிடுவரோ! அவர் எவ்வழி விட்டாலும் அதுவே நல்வழி' யென்று நம்பி தர்மத்தைக் கைவிடா திருப்பவர்கள் எப்படியும் ஜயிப்பார்களென்று மட்டும் நாம் உறுதியாய்ச் சொல்லக் கூடியதாயிருக்கிறது. மேற்றிசை வித்வத்ஜனங்கள் விற்பன்னர்களுடைய அபிப்பிராயமும் இதுவேயாகவிருக்கிறது.

## THE BLOCKADE.

### மறியல்யுத்தம்.

இப்பொழுது நடந்து வரும் பாரதப்போர் தேய்பிறை வழக்குரைக்கிலக்காக யுத்தம் செய்வோர் ஒருவரை யொருவர் ஒழித்துவிடப் பார்ப்பதாயிருக்கிற தென்று சொன்னோமல்லவா. அப்படி எதிரியைத் தேய்ந்தழிந்து போகச் செய்யும் உபாயங்களில் முக்கியமான தொன்று 'மறியல் யுத்தம்' செய்தல். அப்படியென்றால் என்ன? என்று கேட்கலாம். அவர்களுக்கு விஷயம் விளங்கச் செய்யவேண்டி ஓர் சின்ன உதாரணத்தைச்சொல்லி அதைப் பெரிய உதாரணத்துக்குப் பொருந்தப் பொருத்திக்காட்டுவோம்.

### மறியல் சாதனம்.

ஒருவன் மற்றொருவனுக்குக் கடன் கொடுத்துக் கடன்காரன் கொடுத்த கடன் தொகையைக் கடன்பட்டவன் திருப்பிக் கொடாமல் 'சால்ஜாப்புச்' சொல்லி வந்தால் கடன்காரன் கடன்பட்டோன் வாசலில் மறியல் கிடந்து கடன் தொகையை வசூல் செய்கிறவழக்கம் இத்தேசத்தில் பூர்வந்தொட்டு பிரபலமாயிருந்து வந்தது. புதுநாகரிகத்தில் அது போய் கோர்ட்டுக் கிழுக்கிறவழக்கம் ஊர்ஜிதத்துக்கு வந்திருந்தாலும் பழைய ஏற்பாட்டில் சாதனச் சிறப்பு மிகவுண்டு என்று சொல்லத்தடையில்லை.

ராமன் பீமனுக்குக் கடன் கொடுத்தான் என்று வைத்துக்கொள்வோம். பீமன் வலுத்தகையாக விருப்பது கொண்டு ராமனுக்குக் கொடுக்க வேண்டிய கடனைக்கொடாமல் 'சால் ஜாப்பு' † மட்டும் சொல்லி இழுக்கடிக்கிறான். ராமனுக்கு பீமனிடத்தில் நம்பிக்கையுள்ள மட்டும் அவன் சொல்லும் ஜவாபுகளை நம்பிக் காத்துப்பார்க்கிறான். அவனிடத்தில் நம்பிக்கை யில்லாவிட்டால் ஒருநாட் காலமே யெழுந்து பீமன் வீட்டுக்குச்சென்று கடனைக் கேட்கிறான். "ஆகட்டும் தருகிறேன்" என்று அவன் ஜவாபு சொன்னால் "சரி அப்படியே ஆகட்டும் காத்துக்கொண்டிருக்கிறேன்" என்று வாசலில் உட்கார்ந்து விடுகிறான். பொழுதோ புலர்கிறது. சூரியன் வரவர மேலெழுந்து தன் உக்கிரமான கிரணங்களை வீசுகிறான். ராமன் "ஓடுமீனோட ஒருமீன் வருமளவும் வாடியிருக்குமாம் கொக்கு" என்றபடி வணக்க ஒடுக்கமாய் முகம்வாடி வாசலில் தானே யுட்கார்ந்திருக்கிறான். காலமே மணி 10-ஆகிவிட்டது; ராமன் இன்னும் உட்கார்ந்த விடம் விட்டு எழுந்திருக்கவில்லை. பீமன் வீட்டுக்கு வரத்துப்போக்கா யிருக்கிறவர்கள் அவன் வாடி வதங்கி யுட்கார்ந்திருப்பதைப் பார்த்து "அந்த மனிதனை யேன் அப்படி காக்கப்போட்டிருக்கிறாய், என்ன சமாசாரம்?" என்று பீமனை யோகக்ஷேமம் விசாரிக்கிறார்கள். பீமன் அவர்களுக்கும் ஏதோ ஒரு விதமாக 'சால்ஜாப்பு' சொல்லித் தப்புகிறான். மணி 11-ஆய்விட்டது. 12-ம் ஆய்விட்டது. எல்லாரும் சாப்பிடுகிற சமயம் வந்துவிட்டது. ராமன் மட்டும் பல்லுக்கூட விளக்காமல் அப்படியே உட்கார்ந்துகொண்டிருக்கிறான். அவனிடத்துப் பரிதாபமுற்று, போகிறவர்கள் வருகிறவர்கள் எல்லாம் அவனைக்கண்டு என்ன சமாசாரம் என்று கேட்கிறார்கள். அவன் கேட்டவர்களுக்கெல்லாம் தன் கதையை ஒளிக்காமற்சொல்லிவருகிறான், பீமன் 'குட்டு' வெளியாகிவிட்டது. ஊரெல்லாம் அவன் பேச்சே பேச்சாயிருக்கிறது. பீமனுடைய சிநேகிதர்கள் அவன் வீட்டில் நுழைய அஞ்சுகிறார்கள். மற்றவர்கள் அவனைப் பற்றித் தாராளமாய் தங்கள் அபிப்பிராயத்தைச் சொல்லிக்கொண்டு போகிறார்கள். இப்படியாக ஊரெல்லாம் பீமன் செய்தி பரவிவிட்டது. எல்லாருக்கும் ராமனிடத்தில் ஒருவித பச்சாதாபமும் பீமனிடத்தில் ஒருவித அருவருப்பும் உண்டாய்விட்டது. மத்தியானம் 1-மணி, 2-மணி, 3-மணி யாகிவிட்டது. இன்னும்

† இது 'சவால்-ஜவாப்பு' என்பதன் திரிபாயிருக்கலாமென்று நினைக்கிறோம். கேட்டால், 'ஆகட்டும் தருகிறேன்' என்று கேட்ட சவாலுக்கு ஜவாபு மட்டும் சொல்லி வருகிறது.

கேள்விமுறையில்லை 'பாவம் ராமன் பசியினால் கலை போட்டுக்கிடக்கிறான். பீமன் இன்னும் கொடாமுண்டனாகவே யிருக்கிறான். ராமனும் விடுகிற பேர்வழியாகவில்லை. மாலை 5 மணியாய்விட்டது. 6-மணியும் அடித்துவிட்டது. சந்தியா தேவி நிருத்தமிடும் காலம் வந்துவிட்டது. பீமன் உள்ளேயே நாணிக்கொண்டு பதுங்கிக்கிடக்கிறான். ராமன் மூர்ச்சித்து வாசற்படியில் தானே விழுந்து கிடக்கிறான். உள்ளேபோகவோ வழியில்லை. அவனைத் தாண்டிக்கொண்டு போனால் போகலாம். ஆனால் தேவதைகளும் வரம் கிடக்கிறவனைத் தாண்டிக்கொண்டு போகத் துணியார்கள். சந்தியா தேவி உள்ளே நுழைய மாட்டாமல் வெளியில் தானே நின்று மறியல் கிடப்பவனைத் தாண்டிப்போகமாட்டாமல் போய்விடுகிறாள். அவன் வீடு வெறித்துக்கிடக்கிறது. ஊரிலுள்ளார் எல்லாரும் அதைச் செத்த வீடு போல் கருதி விலகிப்போகிறார்கள். உள்ளேயிருக்கிறவர்களுக்கும் அவனைத் தாண்டிக்கொண்டு போகக்கூடவில்லை. தாண்டிச் சென்றால் பிரம்மஹத்தி தோஷம் சம்பவிக்கும். பீமன் தன் வீட்டில் தானே முற்றுகை போடப்பட்டவனாய் விட்டான். ஊராரோடு அவனுக்குப் பேச்சு வார்த்தையில்லை. நெருப்புக்கொடுத்து வாங்குவாரும் இல்லை. இது அவனுக்குப் பெருந் துன்பமாகவிருக்கிறது. எல்லாரும் அவனை நடைப்பிணமாக மதித்து அவனைக் கண்டால் ஓடுகிறார்கள். இந்த ஹிம்சை அவனுக்குப் பொறுக்க முடியவில்லை. கடைசியில் அவனுக்கு மிகவும் வேண்டியவர்கள் சிலர் அவனைச் சமீபித்து வர, அவர்களிடம் செம்பு தவலை பண்டம் பாடிகளை யெல்லாம் அடைமானம் வைத்துக் கடன் தொகையை வாங்கிக் கொடுத்து விடுகிறான். ராமனும் வந்தனத்துடன வாங்கிக்கொண்டு துரும்பாயிளைத்து வீடு போய்ச் சேருகிறான். பீமன் லச்சையினால் மனம் நொந்து இளைத்துக் களைத்து உருமாறிவிடுகிறான். ராமனும் 'தாரணை' கிடந்த சிரமத்தினால் உடல் கருகி மனம் சுருங்கி வெம்பிப்போகிறான். இப்படியாக நடக்கும் சம்பிரமத்துக்கு "மறியல் கிடக்கிறது" அல்லது "தாரணை" யென்று பேர்.

மேலே சொன்ன உதாரணத்தில் ராமனைக் கூட்டாளிகளாகவும் பீமனை சண்டைக்காரர்களாகிய ஜெர்மானியரினத்தாராகவும் வைத்துக்கொண்டு மனைவலி, தேக சிரமம் இவற்றிற்கு பதிலாக படைவலி, களபலி இவற்றை யுத்த சாதனமாக வைத்துக்கொண்டு சிந்தித்துப் பாருங்கள். பீமன்வீடு ஐரோப்பா கண்டத்தின் மத்தியபாகமாகிய ஜெர்மனி, ஆஸ்திரியா ராஜ்யங்களிருக்கும் ஸ்தானமாம். அவர்களுக்கு வெளியில் போக்கு வரத்தில்லாதபடி கடலில் எங்கும் மறியல் போட்டு அவர்களைத் தரையிலும் நாலாபக்கத்திலும் யுத்தம் தொடுத்து நெருக்கிவருகிறார்கள். ஊரார் என்று சொன்னது சண்டையில் சம்பந்தப்படாத இதர தேசத்தார்கள். களபலி யென்றது பெல்ஜியம். அத்தேசத்தரசனைக் குடி, படை, நாடு, அரண் என்கிற நாலு அங்கங்களோடு அநியாயமாய்க் களபலி யிட்டுவிட்டார்கள். மற்றொரு பக்கத்தில் ஸெர்பியாவை நசுக்கிவிட வழி தேடிவருகிறார்கள். கூட்டாளிகள் ஜெர்மானியரை இப்படி மறியல் போட்டு அவர்கள் பலம் குன்றித் தேய்ந்து போக அவர்கள் சேனையை ஹதம் செய்துவர, ஜெர்மானியரும் ஆஸ்திரியா தேசத்தாரும் வெறி கொண்டு பக்கத்திலுள்ள தேசங்களைப் பிடித்தமட்டில் துவம்சம் செய்து நிர்த்தூளியாக்கி வருகிறார்கள். மேலும் ஜெர்மானியர் பிரிடிஷார்மீது தீராத கோபங்கொண்டு, பிரிடிஷ் தீவுகளைச் சுற்றி மறியல் போட்டிருப்பதாகச் சொல்லி அவர்கள் கப்பல்களையும் அங்கே வரும் இதர கப்பல்களையும் 'ஸப்மாரின்' கடலில் மூழ்கிச்செல்லும் படகுகளால் உடைத்துத் தகர்த்து நிர்த்தூளிசெய்து வருகிறார்கள்.

ஜெர்மானியர் இப்படி நெருக்கடி செய்யப் பெறவே, அந்த இடுக்கண் பொறுக்கமாட்டாது சீறிச்சினந்து பெல்ஜியம் வழியாக வட கடல் (North Sea) சேர யத்தனித்ததுபோல, ஸெர்பியாவை நசுக்கி அது வழியாக துருக்கியில் பிரவேசித்து பாக்டாட் மார்க்கமாய் ஆசியா கண்டத்தில் தலைகாட்டி ஸூயெஸ் கால்வாயை யடைத்து ஆசியாவுக்கும் ஐரோப்பாவுக்குமுள்ள வழியில் மறியல் போட்டு பிரிடிஷாருடைய கீழ்நாட்டு ஸ்தலங்களைச் சீர்குலைக்கப்பார்க்கிறார்களாம். அதைத் தடுக்கக் கூட்டாளிகள் பெரு முயற்சி செய்து வருகிறார்கள். இந்தப் பிரமாதம் விளைக்கும் யுத்தம் இப்பொழுது பால்கன் தீபகர்ப்பத்தில் (Balkans) நடந்து வருகிறது.

## NATURE STUDY.
## பிரகிருதி வித்தை.

### OBSERVATIONS OF A WALK ON THE BEACH.
### கடற்கரை யுலாக்காட்சி.
**(A Talk about Jelly-Fish.)**

சென்ற வெள்ளிக்கிழமை சாயங்காலம் நானும் என் சிறு தம்பி சாமாவும் கடலோரம்போயிருந்தோம். நான் பட்டணம்வந்து சில வருஷங்களாயிருந்தபோதிலும் சாமா இங்கேவந்து சில நாட்கள்தான் ஆயின. ஆகையாலும் அவன், இதற்குமுன் சமுத்திரத்தையே பார்த்திருந்ததில்லையாதலாலும், அன்று சாயங்காலம் வெகு ஆனந்தமும் ஆச்சரியமும் அடைந்தான். நாங்கள் கடற்கரைக்குப் போகும்போது மணி 6. மேலும் அன்று அமாவாஸையானதால் முன்னிருட்டாகவுமிருந்தது. அன்று வெள்ளிக்கிழமையாதலால் செம்படவர்கள் இருட்டுக்குமுன் வலைகளைக் கரையேற்றி அகப்பட்ட மீன்களை கடைக்கு அனுப்பிவிட்டு கட்டை மரங்களைப் பூஜைசெய்ய ஆரம்பித்துவிட்டார்கள்.

அன்று சாயங்காலம் நாங்கள் அலையோரமாக நடந்துகொண்டிருந்தோம். சாமா முதலில் அலையைக்கண்டு பயப்பட்டான். பிறகு பழக்கமாய்விட்டது.

"அண்ணா, எனக்கு அதுக்குள்ளே அலையினிடமிருந்த பயம் போய்விட்டதே; அக்காளுக்கு இன்னம் போகவில்லையே" என்றான்.

"சாண்பிள்ளையாகிலும் ஆண்பிள்ளையல்லவா." என்றேன்.

சற்று தூரம் நடந்துபோகையில் செம்படவர்கள் வலை கரையேற்றின அதேயிடத்துக்கு வந்தோம். இங்கே அவர்கள் பொறுக்கிப்போன மீன்கள்போக இன்னும் அநேக பூச்சிகளும், கிளிஞ்சல்களும் கிடந்தன. இதில் அலை தானாக அடித்துக்கொண்டு போன சிறிய பூச்சிகள் போக பெரிதாக சில கிடந்தன. அதில் ஒன்று ஒரு சிறிய ஆமையவ்வளவு பெரிது இருந்தது. ஆனால் ஆமையைப்போல் கடினமாகவும், கறுப்பாகவும் இருக்கவில்லை.

"அண்ணா, இதென்ன சமுத்திரப்பனை நொங்கோ? இவ்வளவு பெரிதாயிருக்கிறதே" என்றான் அதைப்பார்த்ததும் சாமா.

"ஐயோ, அதையெடுத்துத் தின்றுவிடாதே அது ஒருவிதப் பூச்சி" என்றேன்.

"என்ன? பூச்சியா, இப்படிப் பளபளவென்று கண்ணாடிபோல் இருக்கிறதே."

"ஆம், இது பூச்சிதான், இது சமுத்திரத்தில் நீந்திக்கொண்டு நீரிலேயே ஜீவித்து இருக்கிறதினாலும், இதற்கு இதைக்காட்டிலும் ஜாஸ்தி பலமுள்ள சத்துருக்கள் அநேகமிருக்கிறதினாலும், அவைகளின் கண்ணுக்கு சுலபமாகத் தெரியாமலிருக்கும்பொருட்டு இந்த மாதிரி தனக்குத் தனிநிறமில்லாமல் சமுத்திர ஜலத்தில் மிதக்கும்போது அந்த ஜலத்தின் நிறத்தையே தன் உடம்பு வழியாகக்காட்டி தண்ணீர்க்கும் தனக்கும் வித்தியாசமில்லாமல் செய்துகொள்ளக் கூடியதாக உண்டாக்கப்பட்டிருக்கிறது."

சாமா "இவ்வளவு சமத்காரமா!" என்று சொல்லிக்கொண்டு "சற்று இதைப்பார்ப்போம், அண்ணா," வென்று என்னையும் அழைக்க அதினிடம் நாங்களிருவரும் உட்கார்ந்தோம்.

"அண்ணா, இது பூச்சி யென்கிறீர்களே இதற்கு உயிரிருக்கிறதோ?"

"இப்போ செத்துப்போய்விட்டது. ஏனென்றால் தண்ணீரைவிட்டு வெளியில்வந்து நேரமாய்விட்டதல்லவா."

"நேரமானால் செத்துப்போய்விடவேணுமா?"

"தண்ணீரில் ஜீவிக்கிற ஜெந்துக்கள் தவளைபோல் தரையிலும் ஓடியாடிக்கொண்டிருக்கத் திறமையுள்ளதானால் இங்கேயும் ஆகாரம் கண்டுபிடித்துப் பிழைத்திருக்கும். ஆனால் இது தண்ணீரில் மாத்திரம்தான் ஓடியாடிக்

கொண்டிருக்கக்கூடியது. உன்னை இப்பொழுது இதோ சமுத்திரத்தில் போட்டுவிட்டால் என்னசெய்வாய்?"

சாமா, "சரிதான். இந்த ஜெந்துதான் செத்துப்போய்விட்டதே அதைத் தொடலாமோ?" என்று கேட்டவன் உடனே "தொட்டால்தான் என்ன" என்று அதைக் கையில் எடுத்தான். எடுத்ததும் "ஐயோ!" என்று திடீரென்று கதறிக்கொண்டு அதைத் தொப்பென்று கீழேபோட்டுவிட்டுக் கையைக் கையை உதறினன். அவனைப்பார்த்து நான்,

"என்னடா? ஏனடா அவசரப்பட்டாய்?" என்றதற்கு அவன்,

"இல்லே, அண்ணு, நன்ருய்க் கடித்துவிட்டாப்போ லிருந்தது. ஆனல் பாதகமில்லே" யென்று வலதுகையின் மணிக்கட்டின் உள்பக்கத்தை இடது கையால் தேய்த்துக்கொண்டு அண்ணுவைப்பார்த்து பரிதாபப்படத்தக்க மாதிரியாய் "என்ன அண்ணு தேள் கொட்டினுப்போல் இருந்ததே, செத்துப் போச்சென்றீர்களே" என்ருன்.

"அவ்வளவு அவசரப்படாமலிருந்தாயானல் நான் அதை யெடுக்கிறமாதிரி சொல்லியிருப்பேன். ஆனல் பரவாயில்லே. இந்த ஜெந்துக்கள் அதன்வாய்ப் பக்கங்களுக்குச் சமீபத்திலெல்லாம் இந்த மாதிரிகொட்டிக்கடுக்கச்செய்யக்கூடிய வெகு சிறிய உறுப்புகளே உடைத்தாயிருக்கின்றன. மனுஷனன உனக்கே இவ்வளவு கடுக்குமானல், இன்னும் வெகு சிறிய ஜெந்துக்களுக்கு எவ்வளவுதான் கடுக்காது. இதின் ஒத்தாசையால்தான் இந்த ஜெந்து தனக்கு இரையாகக்கூடிய சிறிய ஜெந்துக்களைக் கொட்டி அவைகளைக்கொன்ருே அல்லது மூர்ச்சையடையச்செய்தோ தின்றுவிடுகிறது."

"அப்படியானல் இந்த ஜெந்துவுக்கு வாயெங்கேயிருக்கிறது அண்ணு? இதற்கு என்ன பெயர்."

"இது மேலேபட்டால் கடுத்தாப்போல் தினவுகாண்கிறபடியால், இவ்விடத்துச் செம்படவர்கள் இதற்குச் சொறி யென்று பெயரிட்டிருக்கிருர்கள். இங்கிலீஷில் இதற்கு ஜெல்லி-பிஷ் (Jelly-Fish) என்று பெயர். இதில் சில 'ஜெல்லி பிஷ்'களுக்கு கீழே வயிற்றுப் பக்கத்தில் நடுவில் ஒருவாய் இருக்கும். சிலதுக்கு நடுவிலிருக்கும் வாய் இல்லாமல் மூடப்பட்டு அந்த இடத்திலிருந்து புறப்படும் (tentacles) என்று சொல்லப்படும் மீசை போன்ற உறுப்புகளில் சிறிதுசிறிதாக அனேக ஆயிரம் வாய்த்துவாரங்கள் இருக்கும். இதோ (கையில் ஒன்றைவைத்துக்கொண்டு காட்டி) இந்த ஜெந்துவுக்குப் பின்சொன்ன மாதிரிதான் வாய்கள் இருக்கின்றன.

"சரிதான். இது என்னமாகத் தண்ணீரில் ஓடும் அண்ணு! இதற்குக் காலேக்காணேனே."

"இதற்குக் கையாவது காலாவது கிடையாது. அதனல்தான் இதைத்தாழ்ந்த ஜெந்துவென்றும், கைகால் உறுப்புகள் உள்ள ஜெந்துக்களை உயர்ந்தவைகளென்றும் சொல்லுகிருர்கள். இதன் மீசைகள் தான் இதற்கு கைகள்போலும். இதற்குக் காலுக்குப்பதிலாக வேலைசெய்யும் இடம் இதோ தெரிகிறதே அதன் விளும்பு இதுதான். இது ஒரு சிறிய குடைபோலிருக்கிறது பார்த்தாயா. இதன் மீசைகளெல்லாம் இந்தக் குடையின் நடுவில் குடைக்காம்புக்குப்பதிலாக இருக்கிறது. ஆனல் வெகு குட்டையாகவிருக்கிறது. இது தன் குடைபோலிருக்கும் உடம்பின் கீழ் வரம்பை வேண்டும்போதெல்லாம் சுருக்குப்பை வாய்போல் சுருக்கக்கூடும். இப்படிச் சுருக்குவதினல், ஆகாசத்தில் பறக்கும பக்ஷி எப்படித் தன விரித்த சிறகுகளைக் கீழே நறுக்கென்று காற்றைக் கவ்வுவதுபோல் மடக்கி அடித்தவுடன் குப்பென்று சிறிது மேலே கிளம்புகிறதோ அதேமாதிரியாகத் தன் உடம்பையும் தண்ணீரில் கிளம்பச்செய்து கொள்ளக்கூடும், நேரே மேலே கிளம்பவேணுமானல், தன் உடம்பைச் செங்குத்தாக வைத்துக்கொண்டு தண்ணீரை உதைத்துக் கிளம்

பும் ; ஒருபக்கமாகப் போகவேணுமானால், சாய்த்துப்பிடித்த குடைபோல் தன் உடம்பைச் சாய்த்து வைத்துக்கொண்டு தண்ணீரை உதைத்துக் கிளம்பும்.''

“அண்ணா, இது ‘நேரப்போகவேணுமென்றால்,’ ‘சாய்த்துப்போகவேணுமென்றால்’ என்று சொல்லுகிறீர்களே இதற்குக் கண் தெரியுமா? தெரியுமானால் கண் எங்கே யிருக்கிறது?''

“இதற்குக் கண், காலுக்குச் சரியான அதன் விளும்பிலேயே இருக்கிறது. இதோ பார், சற்று கறுத்த மஞ்சள் நிறமாக புள்ளிகள் தெரிகின்றன, இவை தான் இதன் கண்கள். இதற்கு கண்கள் மாத்திரமல்ல, காதுகளும் இன்னும் தொட்டால் உணரும்படியான உறுப்புகளும் இந்த விளும்பில் இருக்கிறதாகக் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது.''

நாங்கள் இப்படியாகப் பேசிக்கொண்டிருந்ததில் பொழுதுபோனது தெரியாமல் இருட்டு அதிகமாய்விட்டது. மேலும் செம்படவர்கள் பூசைக்காக விளக்குகள் ஒருபக்கத்தில் கொளுத்தியிருந்ததால் அந்தப் பிரகாசத்தைப் பார்த்த கண்ணுக்கு மற்ற இருட்டியிருக்கும் பக்கமெல்லாம், இன்னும் மையிருட்டாகவிருந்தது. “இவ்வளவு இருட்டிப்போய் விட்டதே'' என்று இருவரும் எழுந்தோம்.

“அண்ணா, இதென்ன சற்றுமுன்னே இந்த அலையெல்லாம் வெள்ளையாக விருந்தது, இப்போ தங்கமாட்டமாக விருக்கிறது; ரொம்ப வேடிக்கையாயிருக்கே!'' என்றான் சாமா.

“ஏனடா, தங்கமாட்டமாகவா இருக்கிறது அது?''

“ஆமா அண்ணா, பளிச்சு பளிச்சென்று இருக்கு, மின்னினலிருக்குமே அப்படியிருக்கு.''

“வேறே ஒன்றும் நீ பார்த்ததுக்குள்ளே இந்த மாதிரி இல்லையா? அகத்திலே......' யென்று சொன்னவுடன்,

சாமா “ஆமா, அண்ணா, அகத்திலே அம்மா விளக்கேற்றும்போதெல்லாம் பார்த்திருக்கிறேன். நெருப்புக் குச்சியை இருட்டிலே தேய்த்தால் இப்படித்தான் இதே மாதிரியான வெளிச்சம் தெரிகிறது. இதென்ன அண்ணா?''

“இது ‘பாஸ்பரஸ்’ phosphorus (அதாவது, தீயெரி பாஷாணம்) என்று சொல்லப்படும் வஸ்து. எப்பொழுதும் இதைத் தண்ணீர்க்குள்ளேயே வைத்து வைப்பார்கள். வெளியில் எடுத்தாலாவது சூடுபட்டாலாவது வெகு சுளுவில் நெருப்புப் பிடித்துக்கொள்ளும். இதுவும் அந்த (phosphorus) வஸ்துவின் வெளிச்சம்தான்.

“எப்படி! அப்பா! இவ்வளவு phos-phos —அது என்ன அண்ணா?''

“‘Phosphorus’ நீதான் 3-வது கிளாஸ் வரையில் படித்திருக்கிறாயே. இது சொல்ல வரவில்லையா!''

“இவ்வளவு ‘பாஸ்பரஸ்’ (phosphorus) கடலில் இருந்தால் மத்தியானம் வெயில் நெருப்பாட்டமா அடிக்கும்போதெல்லாம் திறந்து தானேகிடக்கிறது, தானே நெருப்பு பிடிச்சுக்காதோ?'

“அப்படியில்லை. இந்த phosphorus எல்லாம் அப்படியே கட்டிகட்டியாய் தனியாகக் கிடக்கவில்லை. வெகு சிறிய அணுக்கள் போன்ற அநேக ஜெந்துக்கள் உடம்பில் சேர்ந்திருக்கிறது. இந்தப் பூச்சிகள் இராவேளையில் தான் மேலே மிதந்துவருகின்றன, பகலில் உள்ளே ஆழத்தில் அழுந்தியிருக்கும். இரவிலும் இந்தப் பூச்சிகள் கடலில் எங்கேயும் இருந்தாலும் அலைமுதலானதுகளால் அடிபடும் இடங்களில்தான் இப்படி வெகு பிரகாசமாகத் தெரியும். இதோபார் அலை அடித்துப்போகிற இடத்தை! அலையுடன் மிதந்துவந்த ஜெந்துக்கள் அநேகம் பெரிய குன்றுமணிகளளவு கிடக்கிறதுபார். வா, அதையெடுத்துப் பார்ப்போம். இதோ பார்த்தா

யா, இது எவ்வளவு சிறிதாகவிருக்கிறது. தூரத்திலிருந்து பார்த்ததினாலும், இது அதிக வெளிச்ச முடையதாகையாலும் அத்தனை பெரிதாகத் தெரிந்தது. கையில் எடுத்ததும் எவ்வளவு சிறிதாகவிருக்கிறது! கையில் நெருடினால் அகப்படக்கூடவில்லை. இதைப் பகலில் பார்த்தால் கண்டுபிடிக்கிறது வெகு கஷ்டம். கடல் ஜலத்தை ஒரு வெள்ளை சீசாவில் எடுத்துவைத்துப் பார்த்தால் கஷ்டப்பட்டுக் கண்டுபிடிக்கலாம். அதை நன்றாய்ப் பார்க்கவேணுமானால் பூதக்கண்ணாடியில் வைத்துப் பார்த்தால் செவ்வையாக அதன் உறுப்புகளெல்லாம் தெரியும்."

"அப்படியா! அண்ணா, இதோ இந்த சோறியை—அதென்ன அண்ணா அந்தப் பெயர் நன்றாகவில்லை—அதன் இங்கிலீஷ் பேர் என்ன—ஜெ-ல்-லி-பி-ஷ்—இதைப் பார்த்தீர்களா, இதுவும் பளபளவென்று இருக்கிறது! இதிலும் 'பாஸ்பரஸ்' (phosphorus) இருக்கிறதா?"

"இல்லை. ஆனால் இது இந்த சிறியphosphorus உள்ள ஜெந்துக்களை சாப்பிடுகிறதினாலும், இந்த ஜெந்துவின் தோல் ஊடேவெளிச்சம் தெரியக்கூடியபடி தெளிவுள்ளதாய் இருக்கிறபடியாலும், உள்ளே சாப்பிட்டிருக்கப்பட்ட சில ஜெந்துக்களின் வெளிச்சம் வெளியிலும் தெரிகிறது. மேலும் இந்த (Jelly-Fish) ஜெந்துவின்மேலேயும் இச்சிறு ஜெந்துக்கள் அநேகம் ஒட்டிக்கொண்டிருக்கலாம்."

சாமா, "தூரத்திலிருந்துபார்த்தால் பளிச்சென்று எரியும் ஒரு சிறிய விளக்குப்போல் காணும்போலிருக்கிறது" என்று சொல்லி தான் நாலுபுறமும் பார்த்தான். வெகு இருட்டாகவிருந்தது. செம்படவர் பூஜைசெய்துவிட்டு ஏதோ கத்த ஆரம்பித்துவிட்டார்கள். கடலோரம் காத்துவாங்கவந்தார்கள் ஏற்கனவே தங்கள் வண்டிகளுடன் வீட்டுக்குத் திரும்ப ஆரம்பித்துவிட்டார்கள். சாமாவோ மறுபடியும் அலையையும், அதன் வெளிச்சத்தையும், இந்த Jelly-fishயும் பார்த்துப்பார்த்து மலைத்துக்கொண்டு நின்றான்.

நான் அவன் தோளைத் தடவிக்கொண்டு "அகத்துக்குப் போகவேண்டாமா?" வென்றுசொன்னவுடன், சாமா திரும்பி, "எனக்கும் பசிக்கிறது அண்ணா, அம்மா, அக்கா எல்லாரும் காத்துக்கொண்டிருப்பார்களே." என்றான்.

"சரி, இன்றைக்கு இவ்வளவு போதும்; வீட்டுக்குப் போவோம் வா" என, இருவரும் வீட்டுக்குத் திரும்பினோம்,' 'அண்ணா இந்த மாதிரி நாளைக்கும் வருவோமா? இதெல்லாம் ரொம்ப அதிசயமாயிருக்கு அண்ணா!"

"இந்த மாதிரி அதிசயம் சமுத்திரக்கரையொன்றில்தானிருக்கிறதென்றில்லை. எங்கே பார்த்தாலும் இது போன்ற அதிசயங்களிருக்கின்றன. நமக்கு அவைகளைப்பார்க்கத் தெரியாமல் நாம் கபோதிபோல் போகிறோம். எதையும் நன்றாக நோட்டமிட்டுப் பார்க்க அறிந்தவர்களுக்குக் கண்ட விடமெல்லாம் கண்கொள்ளாக் காக்ஷியாகவிருக்கும். ஆகையால் நீ இப்பொழுதே உன்கண்களையும் காதுகளையும் நன்றாக உபயோகிக்கக் கற்றுக்கொள்ளவேண்டும்."

---

## The "MADRAS MAIL" on RURAL EDUCATION.

"Mr. C. V. Swaminatha Iyer, Editor of the *Vivekachintamani*, has in recent months made his journal the special organ of "The Children's Educational Movement" in the furtherance of which he has been taking a keen interest. In the current issue he has some thoughts and reflections on the reform of rural education, in which a proper system devised to suit the needs of the village ought, to be in his opinion, to be a special feature. He also urges the need for all education in earlier stages being imparted through the indigenous languages, a point of view which has met with the approval of many eminent educational officers and noted publicists in the country. In this laudable and self-imposed task, Mr. Swaminatha Iyer is seeking the co-operation of all well-wishers of the country."—*The Madras Mail of 23rd November* 1915.

## ON THE GREATNESS OF CHASTITY.

### கற்பின் மகிமை.

நளாயினி கதை.

'கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை' யென்றார் மேலோர். அப்படி யென்றால் கணவன் சொல் தவறாமை யென்று அர்த்தம் செய்கிறார் சிலர். 'சொல்' என்பது வாக்குக்கே சிறப்புப் பெயர். 'வாக்குத் தவறாமை' தானே சொற்றிறம்பாமையாகும். சாவித்திரி ஸத்தியவானை மனதால் வரித்துவிட்டு அவன் அற்ப ஆயுசுள்ளவன் என்று நாரதர் சொல்லக் கேட்டும் தன் 'வாக்குத் தவறாமை' யாகிய கற்பின் சிறப்பால் அவனையே மணந்து அவனுயிரைக் காப்பாற்றினாள். இப்படியே தன் வாக்குத் தவறாதவர் இல்லறம் புகுந்தபின் கணவன் சொற்றவறி நடக்கார் என்பது இயல்பினாலே எற்பட்டு அமையும். பெண்களுக்குக் கற்பினும் சிறந்த கருமமில்லை; அதைவிட மேலான ஒழுக்கமும், கொடையும், தவமும் குணமுமில்லை. அதுவே ஞானத்தை யளிக்கும். அதுவே கடவுளையும் காட்டிக் கொடுக்கும். உதாரணம் வேண்டில் சிவவாக்கியர் மனைவி தன்னுடைய கற்பின் மஹிமையினால் கொங்கண சித்தருடைய தவச்செருக்கை யடக்கினாளல்லவோ! "கொக்கென்றெண்ணினையோ கொங்கணவா!" என்று அவர் வாக்கு இப்பொழுது ஓர் உச்சித பழமொழியாக வழங்கி வருகிறதல்லவா!

"கற்பினு மதற்குமேலாங் கருமமு மொழுக்கமில்லை
கற்பினு மதற்குமேலாங் கொடையுநற் றவமுமில்லை
கற்பினு மதற்குமேலாங் குணமுமெய் ஞானமில்லை
கற்பினு மதற்துமேலாங் கடவுளும் யாதுமில்லை."

"கற்பிற்கு வேறு கருதினு மொன்றுமில்லை
கற்பிற்கு வேறு காரிகை தனிக்கொன்றில்லை
கற்பிற்கு வேறு சத்தியங் கீர்த்தியில்லை
கற்பிற்கு வேறு குணமுமே யாதுமில்லை."

உலகவழக்கில் கடவுளையும் கற்புடைப் பெண்டிரையும் சோதிக்கலாகாது என்று சொல்லுவர். மௌத்கல்ய ருஷி நளமஹாராஜாவின் புத்திரி நளாயினியின் பதிவிரதா லக்ஷணத்தைத் தன் ஞானக்கண்ணால் அறிந்துணர்ந்ததும் அவ்வளவு மேலான கற்புநிலை 'குடத்து விளக்குப்போல்' கிரஹஸ்தன் வீடு மட்டில் விளங்கிமங்காது உலகுக்கெல்லாம் ஒளிவிளக்காய் விளங்கச் செய்யவேண்டுமென்று தீர்மானித்து அப்பெண்ணை அரசன்மகள், 'கிடைக்கரிய வஸ்து' என்றுன்னி மயங்காமல் தனக்குப் பத்தினியாகவிருக்க பாணிக்கிரகணம் செய்து கொடுக்கவேண்டுமென்று நளமஹாராஜாவை அண்டிக்கேட்டு யாசித்தார். கேட்டார்க்கில்லை யென்னாத அந்த அரசவள்ளலும் அப் பெண்மணியின் சம்மதம் பெற்றீரேல் அப்படியே செய்கிறேன் என்ன, அவரது தவ மஹிமையால் அப்பெண்ணின் மனதைக்கவர்ந்து அவள் தன்னாலே வரிக்கப்பெற்று அப்பெண்ணரசைக் கைப்பற்றினார். பிறகு அவர் செய்த பரிசோதனைகளும் அப்பரிசோதனைக் கிளைக்காமல் நாளாயினியின் கற்புநிலை உருக்கின தங்கம்போல் மேன்மேலும் மாற்றேறிப் பிரகாசிக்கவும் கடைசியில் அவர் தபஸியின் தவமஹிமையிலும் அவளது கற்பின் மஹிமையே சிறந்ததென்று உலகறிய ரூபித்துக் காட்டியானபின், அவளுக்குத் தகுந்த புருஷனாயிருந்து இல்லறம் நடத்தியதும் எல்லாரும் கதை கதையாய்ச் சொல்லக் கேட்டிருக்கிறார்கள். ஆயினும் இக்காலத்தில் அப்படிப்பட்ட கதை சொல்லும் பாட்டியார் அதிகமாயில்லாமையால் தற்காலத்தில் பள்ளியிற்படிக்கும் குழந்தைகள் அதை நன்றாகக் கேட்டறிந்திருக்க மாட்டார்கள். அக்கதையை அவர்கள் நன்றாக அறியவேண்டி பெண்கள் நீதி விளக்கத்திலிருந்து எடுத்து எல்லாருக்கும் உபயோகமாகும்படி கீழே பிரசுரிக்கிறோம்.

### நளாயினி கதை.

நளமகாராஜனுக்கு நளாயினி என்று ஓர் புத்திரி இருந்தாள். அவளுடைய பர்த்தாவாகிய மௌத்கல்யர் மிகுந்த தவசிரேஷ்டர். தனது பத்தினியின் கற்பைச் சோதிக்கும் பொருட்டு தன்னிடத்தில் தன் பத்தினிக்கு

வெறுப்புண்டாகும்படி மௌத்கல்யர் விருத்தராயும் குஷ்டரோகத்தால் மிகவும் வருந்துபவராயும் வடிவந்தரித்தனர். நளாயினி தன்பர்த்தா விருத்தரும் வியாதியஸ்தருமாக இருந்தபோதிலும் "கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருஷன்" என்றவாக்கியப்படி தான் கிஞ்சித்தும் மனஞ் சலியாது அவருக்கு வேண்டிய பணிவிடைகளை அதிக அன்புடன் செய்து வந்தாள். நளாயினியின் கற்பை இன்னும் பரிசோதிக்க மௌத்கல்யர் பெருவியாதியினால் அங்கமெல்லாம் குறைந்து அழுகி துர்நாற்றம் வீசும் துர்நீர் சொட்டும்படியான தன்மையை அடைந்தனர். நளாயினி சிறிதும் வெறுப்புறாத தன் கணவனைக் கடவுள் என மதித்து அவர் இஷ்டப்படி அவரை ஒரு கூடையில் வைத்துக்கொண்டு அநேக திவ்ய தீர்த்தங்களுக்குப்போய் அவரை ஸ்நானம் செய்வித்து வந்தாள். இப்படித் தீர்த்தயாத்திரை போகுங்கால் அவள் கற்பை முற்றிலும் பரிசோதிக்க முனிவர் ஒரு தாசியின்மேல் மோகங்கொண்டதாக நடித்தார். இதனாலும் நளாயினி மனம் கோணாது கணவருடைய தாபத்தை நிவர்த்தி செய்வது பத்தினிகளின் கடமையாதலால் தனது முனிவரின் இஷ்டத்தை நிறைவேற்றும் பொருட்டு பிரதி தினமும் விடியற்காலையில் அத்தாசி வீட்டிற்குச் சென்று சாணம் தெளித்து அழகிய கோலங்களைப் போட்டு வந்தாள். பொழுது விடிந்த பிறகு அந்தத் தாசி விழித்தெழுந்து சாணம் தெளிக்கக் கதவைத் திறந்து வெளியே வந்தபோது பிரதி தினமும் சாணம் தெளித்து விசித்திர கோலங்களிட்டு இருப்பதைக் கண்டு ஆச்சரியமடைந்து இப்படி யார் செய்வது என்று தெரியவேண்டிய ஆவலுடையவளாகி ஒருநாள் நித்திரை செய்யாமலே மறைவிடமாக ஒளிந்து காத்துக்கொண்டிருந்தாள். நளாயினி அதிகாலையில் சாணம் தெளித்துக் கோலமிட நேரில் கண்டு அந்த தாசி "அம்மா! நீர் யார்? ஏன் இவ்வாறு செய்கிறீர்கள்?" என்று கேட்க நளாயினி தன் பர்த்தாவின் கருத்தைத் தெரிவிக்க, தாசியும் இதற்குச் சம்மதிக்க, நளாயினி தன் பர்த்தாவைத் தாசியிடத்தில் சேர்ப்பிக்க, அவர் தனது நிஜ ரூபத்தை அத்தாசிக்குத் தெரிவித்து, தனது இஷ்டத்தை நிறைவேற்றினவராக நடித்தனர்.

பின்பு ஒருநாள் நளாயினி தனது முனிவரைச் சுமந்துகொண்டுபோகும் வழியில் தம்பிவாலில் குச்சு சொருகின குற்றத்திற்காக கழுவேற்றப்பட்டிருந்த ஆணிமாண்டவ்யரின் கால் இவள் தலைக்கூடையில் தட்ட, அவருக்கு மிகுந்த வலி உண்டாயிற்று. அப்பொழுது மாண்டவ்யர் வலியின் உபத்திரவத்தால் "இன்று சூர்யோதயம் ஆனதும் நீ மாங்கல்யம் இழக்கக்கடவாய்" என்று சபித்தார். நளாயினி மௌத்கல்யரின் பிரிவைச் சகியாதவளாய் "சூர்யோதயம் ஆகாதிருக்கவேண்டும்" என்று பிரதி சாபம் கூறினாள். இதனால் எட்டுநாள் சூர்யோதயமாகாமலே யிருக்க உலகம் தவிக்கத்தொடங்கிற்று. தேவர்களின் வேண்டுகோளால் மாண்டவ்ய ரிஷி, தன் சாபத்தை மாற்ற, நளாயினியும் தன் சாபத்தை நிவர்த்திக்க இடம் கொடுத்தாள். பிறகு சூர்யோதயமாகி யாவரும் க்ஷேமமடைந்தனர். உடனே மௌத்கல்யர் தான் மேற்போட்டுக்கொண்ட காரியம் முடிந்ததென்று தன் விகார உருவத்தை மாற்றிவிட்டு சுந்தர ரூபங்கொண்டு அன்று முதல் நளாயினி களிப்புறும்படி இல்லற வழிபற்றி நடந்து கொண்டனர்.

இந்த திருஷ்டாந்தத்தால் கற்புடைய பெண்கள் தம் கணவர் விருத்தராயினும் வியாதியஸ்தராயினும் மனஞ்சலியாது அன்புடன் (அவர்கள் அம்மிமிதித்து அருந்ததி காட்டப் பார்த்துக் கொடுத்தவாக்குத்தவறாமல்) கற்புநெறி நின்று காப்பாற்றுவார்களென்றும், தங்கள் கற்பின் வலிமையால் முனிவர்களின் சாபத்திற்கும் பிரதிசாபமிட்டு முனிவர்களின் சாபம் பொய்த்துப் போகும்படியும் தங்களுடைய சாபம் சத்திய வாக்காகும்படியும் செய்துகொள்ளக் கூடிய மேலான சக்தியைத் தவசிகளைப் பார்க்கிலும் அடையக்கூடியவர்களென்றும் நன்றாய் விளங்குகிறது.

## THE SCENE FROM THE HILL FORT AT TRICHINOPOLY.

## திருச்சினுப்பள்ளி மலைக்கோட்டையிலிருந்து காணும் காட்சி.

சமீபத்தில் நானும் என் தகப்பனாரும் பாலர்க்குழைக்கவென்று கொண்டதீக்ஷையை யனுசரித்து ஸ்தலயாத்திரை புறப்பட்டுப் போயிருந்தோம். அங்கே பற்பல காட்சிகளைக் கண்டு மகிழ்ந்தோம். "ஆறிரண்டும் காவேரி அதினடுவே ஸ்ரீரங்கம்" என்று பாடப்பெற்ற ஸ்ரீரங்கக்ஷேத்திரம் சென்று அரங்கநாதர் திருப்பள்ளிகொண்டிருக்கும் கோயில் தரிசனங்கண்டு கோபுரவாயிலிலிருந்து புறப்பட்டுத் திருச்சினுப்பள்ளி வரும்வழியில் அவ்வூர் மலைக்கோட்டையின் காட்சி கண்கொள்ளக்காட்சியாகவிருந்தது. மலை உச்சியில் உச்சிப்பிள்ளையார் பாலர்க்குப்பாலனாய் சீலர்க்குச்சீலனாய் மூலர்க்குமூலனாய் எல்லாம் தானாகி விளங்கும் காட்சி ஹிருதயத்தைக் கொள்ளைகொண்டு ஊசிபைக் காந்தமிழுக்கின்றவாறு மனதைக் கவர்ந்திழுப்பதாயிருந்தது. இது மெய்யடியார்க்கின்பந்தருவதாயிருப்பதன்றி என்னைப்போன்ற உலகறியாப் பள்ளிப்பையனுக்கும் இன்பந்தருவதாயிருந்தது. இது ஒரு பக்கம் நிற்க. இந்த மலையுச்சியிலிருந்து காணும் காட்சி எல்லாருக்கும் இனிப்பைத் தருவதாயிருக்குமாதலால் அதை நான் படித்துணர்ந்தது உணர்ந்தபடியிருந்ததால் அதையே என்னைப்போன்ற பிள்ளைகள் அனைவரும் படித்து மகிழவென்று கீழேயெடுத்து வரைகிறேன்.

"திருச்சிராப்பள்ளியானது சென்னை இராஜதானியிலுள்ள இருபத்திநான்கு ஜில்லாக்களில் ஒன்றானதாகிய திருச்சிராப்பள்ளி ஜில்லாவின் தலைமைப்பட்டணம். பூர்வத்தில் தமிழ்நாட்டில் செங்கோல் செலுத்திவந்த சேர சோழ பாண்டிய வம்சங்களின் மன்னவர் காலத்தில் இந்நகரம் திரிசிரபுரமென்னும் பெயருடன் கல்விப்பெருக்கிலும் செல்வப்பெருக்கிலும் நிலநீர்வளத்திலும் சீர்பெற்றதாகவே யிருந்தது. பிற்காலத்தில் மதுரையிலரசாண்ட நாயகவரசர் காலத்திலும் தஞ்சாவூரில் துரைத்தனம் செய்த மகாராஷ்டிர இராஜாக்கள் காலத்திலும் கர்னாடகத்திலரசுபுரிந்த மகம்மதியமன்னர் காலத்திலும் இந்நகரம் கொடும்போர்க்களமாயிருந்து, பின்னர் ஆங்கிலேயராட்சியிலமைந்தது முதற்கொண்டு அஷ்ட ஐசுவரியமும்பொருந்தினதாய், ஜனப்பெருக்கிலும் வித்தியாவிஷயமுதலிய வற்றிலும், இவ்விராஜதானியின் தலைமை நகரமாகிய சென்னப்பட்டணத்திற்கு இரண்டாவதாக விளங்குகிறது. இதல்லாமல் இந்நகரின் வடபுறத்தில் மங்கிய செந்நிறத்துடன் ஆகாயத்தை யளாவிநிற்கும் கருங்கற்குன்றின் கம்பீரமான தோற்றத்தினாலும், அதன் முடிகளில், சூரியகாந்தியில் வெகு ரம்மியமாய்ப்பிரகாசிக்கும் தங்கக்கலசங்களுடன் அதிக அற்புதமாய்க் கட்டப்பட்டிருக்கும் ஹிந்துதேவாலயங்களின் காட்சியாலும், இந்நகரம் மிகச்சிறந்தது. நமது தேசத்தையாளும் இராஜப் பிரதிநிதிகளும், மற்றும் வடதேசத்து இராஜாக்களும், ஐரோப்பா அமெரிக்கா முதலான பிறதேசங்களிலிருந்து தேசசஞ்சாரத்தின் பொருட்டு வரும் யாத்திரீகர்களும் தென்னிந்தியாவில் பிரயாணம்செய்யும்பொழுது இந்நகரில் தங்கி மலைக்கோட்டையிலிருந்து தோன்றும் காட்சியைக்கண்டு களிக்காமற் போவதில்லை

இக்குன்று அதன் அடிவாரத்தில் செல்லும் முக்கிய ரஸ்தாவின் மட்டத்திற்குமேல் 273-அடி உயரமானது; சமுத்திர மட்டத்திற்குமேல் சுமார் 503-அடி உயரமுள்ளது. இக்குன்றின்மேலே ஏறிப்போவதற்கு அதன் தெற்குப் பாகத்தில் கருங்கல்லால் அமைக்கப்பட்ட படிக்கட்டு இருக்கிறது. இது நேர்த்தியாயும் விசாலமாயுமிருப்பதுடன், வெயிலில் தாபமில்லாமலிருக்கும்படியாய் இருபுறமும் கருங்கற்சுவர்கள் கிளப்பப்பட்டு கல்லுத்திரங்களால் மேற்றளமிடப்பட்டு நிழலளிப்பதாயிருக்கிறது. இவ்வ

ழியில் முதல் படிக்கட்டு வரிசைகளைத் தாண்டினவுடன் குன்றைச்சுற்றிலுமிருக்கிற தட்டையான விளும்பில் அநேக வீடுகளுள்ள ஒரு தெரு அழகாய் அமைந்திருக்கிறது. படிக்கட்டுகளின் இருபுறத்திலும் சிறியகோவில்களும், மண்டபங்களும், நேர்த்தியானவேலைப்பாடுள்ள இரண்டுபெரிய மண்டபங்களும் கட்டப்பட்டிருக்கின்றன. கடைசிப்படிக்கட்டு வரிசைகளைத் தாண்டினவுடன் ஒரு பெரிய சிவாலயமிருக்கிறது. (இதற்கு தாயுமானஸ்வாமி கோவில் என்று பெயர்). இந்தக் கோவிலிலுள்ள ஒரு மண்டபத்தின் மேற்றளத்திலமைக்கப்பட்டிருக்கும் ஒரு கல்லுத்திரத்தில் ஒரு பெரிய தாமரைப் புஷ்பமும், அதைச்சுற்றிலும் அநேகங் கிளிகள் உட்கார்ந்துக்கொண்டு புஷ்பத்தின் தேனை அருந்துவதாகவும் சித்திரிக்கப்பட்டிருக்கும் சிற்பவேலையையும், இந்தப்புஷ்பத்தின் நான்கு புறத்திலும் தொங்கிக்கொண்டிருக்கும் இரண்டு மூன்று அடி நீளமுள்ள கற்சங்கலிகளின் வேலைத்திறத்தையும், இன்னும் சிற்சில அழகிய பிம்பங்களையும் தவிர, அதிக விசேஷமான சிற்பவேலைப்பாடுகள் இவ்விடத்தில் வேறில்லை. ஆயினும் இக்கோயிலில் சுற்றுச்சுவர்களை நோக்கிடில், அவைகள் சற்றேனும் சரிதவில்லாமல் செங்குத்தாயிருக்கும் பாறையின் விளிம்பிலிருந்து அதிக உன்னதமாய்க் கட்டப்பட்டிருப்பது, யந்திரங்கள் முதலியன இல்லாத பூர்வகாலத்தில் எவ்வளவு கஷ்டசாத்தியமான காரியமாயிருந்திருக்குமென்பது புலப்படும். இந்தக் கோவிலிலிருந்து குன்றின் உச்சிக்குப்போகப் பாறையிலேயே படிகள் செதுக்கப்பட்டிருக்கின்றன. குன்றின் உச்சியில் ஒரு சிறிய விநாயகராலயம் கட்டபட்டிருக்கிறது. இக்கோவில்களுக்கு தெய்வந்தொழுவதற்காகவும் கண்காட்சிக்காகவும் அநேகர் வந்துபோவதுவழக்கம். மலையின் அடிவாரமுதல் முடிவரையில் சற்றேறக்குறைய சிறிதும் பெரிதுமானபடிகள் 400 இருக்கின்றன. விநாயகர் கோவிலின் மேற்றளத்தில் ஒருமூலையில் ஆங்கிலேயர் கொடிக்கம்பம் நாட்டப்பட்டிருக்கிறது. இதனருகில் நின்று நாற்புறமும் நோக்கிடில், ஆ! என்ன கம்பீரமான காட்சி! என்ன பெருமை! என்ன சிறப்பு! என்று ஒவ்வொருவரும் வியந்து ஆனந்தபூரிதர்களாய் பிரமித்துப்போவார்கள். ஆ! இவைகளெல்லாம் கடவுளின் பெருமையல்லாவோ, அவர் சிறப்பைப் புகட்டுகின்றனவல்லவோவெனக் குதூகலிப்பார்கள். பூமியானது கண்களுக்கெட்டிய தூரம்வரையில், பசுமை நிறைந்த பயிர்களாலும் சோலைகளாலும், அங்கங்கே விளைச்சலில்லாத செம்மண் கரிசல்மண்ணுள்ள நிலங்களாலும், இடையிடையே குறுக்கிட்டோடும் ஆறுகளாலும், அருவிகளாலும் பல, வர்ணங்களமைந்த இரத்தின கம்பளம் விரிக்கப்பட்டதுபோலும், நாற்புரமும் பூமியுடன் சேருவதாகக் காணப்படும் வானமானது இந்திர நீலவர்ணமமைந்த பட்டுச்சிலையால் பூமியின் மேற்பாகத்தில் பென்னம்பெரிய கூடாரமிட்டதுபோலும், இவ்வளவு பெரிய கூடாரத்திற்குத் தகுந்த ஜகத்ஜோதி விளக்காய்ச் சூரியன் கூடாரமுகப்பில் பிரகாசிப்பதுபோலும் தோன்றும்.

### தென்புறகாட்சி.

குன்றின் தென்புறத்தில்தான் திருச்சிராப்பள்ளிநகரம் முக்கியமாய்ப் பரந்திருக்கிறது. அடிவாரத்திலிருந்து குன்றிற்குப் போகும்படிக்கட்டு மார்க்கத்திற்குநேராக, பெண்டீர்கள் அளகத்தைப் பகுக்கும் வகுடைப்போலப் பட்டணத்தை இரண்டாகப்பாகித்து, பலபண்டங்களும் இராசி இராசியாய்க் குவிக்கப்பட்டு வியாபாரமாகும் கடைத்தெரு சற்றேறக்குறைய ஒரே ஒழுங்காய் ஊடுருவிச் செல்கிறது. இப்பாட்டையில் ஜட்காவண்டிகள் முன்னும் பின்னுமாக ஓடிக்கொண்டிருப்பதையும், பல்லோர் ஆடவரும் பெண்டீர்களும், சிறுவர்களும் சிறுமியர்களும் பண்டங்கள் கொள்வதற்கும் கொடுப்பதற்கும் கும்பல் கும்பலாய்ப் போய்க்கொண்டிருப்பதையும் குன்றின் சிகரத்திலிருந்து காண்பது வெகு நேர்த்தியாயிருக்கும்.

"வாய்பறுமணியும் பொன்னுமார முங்கவரி வாலுஞ்
சூரத்திடைபகிலு மஞ்ஞைத் தோகையுந் தும்பிக்கொம்புங்
குரம்பணை நிறப்புமள்ளர் குவிப்புறக் கரைகடோறும்
பரப்பியபொன்னியன்னவா வளம்பலவுங்கண்டார்."

பட்டணத்தின் முக்கியமான இப்பாகத்தின் அநேகமாயிரம் வெண்ணிறமுள்ள மாடிவீடுகளும், சிவப்புநிறமுள்ள தட்டோடுகள் போர்த்திய வீடுகளும், உயர்ந்த கோபுரங்களமைந்த கிறிஸ்தவர் கோவில்களும், மகம்மதியர் மசூதிகளும், தென்னிந்தியா ரயில்வேகம்பெனியாருடைய அதிகார மாளிகைகளும், திருச்சினப்பள்ளி 'ஜங்ஷன் ஸ்டேஷனை'ச்சார்ந்த அநேக கட்டடங்களும், இடையிடையே அங்கங்கே வளர்ந்திருக்கும் சிறிய செடிகளும் பெரியவிருக்ஷங்களுமாகக் கலந்திருப்பது, இது என்ன! வீடுகளின் காடோவென வியக்கும்படி தோன்றுகின்றது. இப்பாகத்திற்கு முப்புறமும் செழித்து ஓங்கி வளர்ந்திருக்கும் தென்னந்தோப்புகளும், வாழைச்சோலைகளும், இளம்பசுமையுடன் விளங்கும் நெற்கழனிகளும், பட்டணத்தை ஆவரணமிட்டதுபோல வில்வளைவாய் வளைந்து அழகிய தோற்றத்தை யுண்டாக்குகின்றன. தென்கிழக்கிலும் தென்மேற்கிலும் பொன்மலை பக்கீர்மலை என்ற இரண்டு சிறு குன்றுகள் சூரியவெளிச்சத்தில் பலவர்ணத்துடன் நேர்த்தியானகாட்சியை அளிக்கின்றன.

மேற்குப்பக்கத்துக் காட்சி.

குன்றின் மேற்குப்புறத்தில், நான்குபக்கத்திலும் அழகிய மதிலமைந்த ஒரு பெரியதடாகமும், அதனடுவில் ஒருசிறிய நீராழிமண்டபமும், பக்கங்களில் பாதிரிமார் வித்தியாசாலைகளும், அவர்கள் வசிக்கும் மாடங்களும், உன்னதமாய்க் கட்டப்பட்ட கிறிஸ்தவர் கோவிலும், சிற்சில இந்து தேவாலயங்களின் சிகரங்களும், வெகுநேர்த்தியாய்த் தோன்றும் கண்களுக்கெட்டியவரையில் பசுமை நிறத்துடன் காணும் அடர்ந்த தென்னந்தோப்புகளும், பாத்திகள் வகுக்கப்பட்டுப் பாசங்கொண்ட கடலென்ன வியக்குமாறு ஒரேபரப்பாய்ப் பரந்த நெல்வயல்களும், இடையிடையே காற்றோட்டத்தால் சிறு அலைகளுண்டாக்கப்பட்டு அவைகளில் சூரியபிம்பம் பிரதிபலித்துப் பளீர்ப்பளீரென்று பிரகாசிக்கும் நீர்நிலைகளும், ஆகிய இவைகளின் தோற்றமும், இக்காட்சிகளின் நடுவே மதவெறிகொண்ட சிற்றானைகள் ஒன்றின்பின் னொன்றாய் வெகு ஆக்கிரோஷத்துடன் தொடர்ந்து ஓலமிட்டுச் செல்வதை யொத்துத் தென்னிந்தியா ரயில்வண்டித்தொடர்கள் தஞ்சாவூர்மார்க்கமாயும், ஈரோட்டைநோக்கியும், சோலைகளினடுவே யிருந்து வெளிவந்தோடி, மறுபடியும் சோலைகளில் மறைந்து செல்லும் தோற்றமும் யாவர்க்கும் இன்பத்தை யுண்டாக்கும்.

வடபக்கத்துக் காட்சி.

இப்புறத்துக் காட்சி ஒப்பு உவமையில்லாதது. திருச்சிராப்பள்ளி நகரத்திற்குச் சற்றேறக்குறைய 11 மைல்தூரத்திற்கு மேற்காகக் காவிரி நதியானது இரண்டு கிளைகளாகப் பிரிந்து, ஒன்று காவிரி என்னும் பெயருடன் தென்கிழக்காய் ஓடி, மற்றொன்று வடகிழக்காய்க் கொல்லிடமென்னும் பெயருடன் பாய்ந்து, திரிச்சிராப்பள்ளிக்குச் சுமார் 10 மைல் கிழக்கே தஞ்சாவூர் ஜில்லாவைச்சார்ந்த கோவிலடியென்னும் கிராமத்திற்கருகாமையில் மறுபடியும் ஒன்றுசேர்ந்து ஓடுகிறது. இவ்விருகிளைகளுக்கும் நடுவே உண்டாயிருக்கும் அழகிய தீவில்தான் இந்து தேவாலயங்களில் பெயர்பெற்ற ஸ்ரீரங்கமும், ஜம்புகேஸ்வரமும் இருக்கின்றன. காவிரி கொல்லிட நதிகளாலும், அவைகளின் மத்தியிலிருக்கும் சோலைகள் நிறைந்த தீவின்காட்சியாலும் வடபக்கத்துக் காட்சிமிகநேர்த்தியானது. கோடைகாலத்தில், வெண்ணிற மணற்பரவிய ஆற்றுக்கால்களில் சூரிய வெளிச்சத்தால் மணலானது விசேஷ வர்ணத்துடன்பிரகாசிப்பதும் ஆற்றுநீர் சுண்டி அதிக கோஷமில்லாமல் 'சலசல' சத்தத்துடன் பாம்பின்கதியை யொத்த வளைந்த பள்ளக்கால்களிற் பாய்ந்து மந்தகதியுடன் செல்வதும், பாலைநிலத்து மணலையொத்த ஆற்றுமணலின் வரண்ட தோற்றத்திற்கு மாறாகத் தீவிலுள்ள சோலைகள் குளிர்ந்த பசுமைநிறத்துடன் தோற்றுவதும், நேத்திரானந்தமாகவிருக்கும். இத்தீவிலெங்கும் ஓங்கிவளர்ந்த தென்னந்தோப்பு

களும், கமுகஞ்சோலைகளும், வாழைத்தோட்டங்களும், மா, பலா, முந்திரி, கொய்பா, மாதுளம், கிச்சிலி, நெல்லி முதலிய பழங்களளிக்கும் விருக்ஷங்கள் வளரும் தோப்புகளும், அரசு அசோகுமுதலிய அழகிய விருக்ஷங்களும், புஷ்பங்கள் மலரும் நந்தனவனங்களும் பசும்புற்புலங்களும் நிறைந்திருப்பதால், இதுவென்ன! பூலோக சுவர்க்கமோவென வியக்குமாறு எங்கும் ஒரே பசுமையுடன் ஆனந்தக்காட்சியை யுண்டாக்குகிறது. இத்தீவிலுள்ள சோலைகளின் சிறப்பு, கவிஞரின் திலகராகிய கம்பர் இராமாயணத்தில் விதேகநாட்டில் உள்ள சோலைகளின் சிறப்பை வருணித்திருப்பதற்கு இசைந்ததாகவே யிருக்கிறது.

"வரம்பில்வான் சிறைமதகுகண் மூழவொலிவழங்க
வரும்புநாண்மலர சோகங்களலர்விளக்கெடுப்ப
நரம்பினுன்ற தேன்முரை கொணறுமலர்யாழிற்
சுரும்புபாண்செயத்தோகை நின்ருடுவசோலை."

மேலும் நமது ஜம்புத்வீபத்திலுள்ள தேவாலயங்களெல்லாவற்றிலும் மிகப்பெரிதானதும், அநேக யாத்திரீகர்கள் வரத்துப்போக்குள்ளதுமான திருவரங்கம் பெரியகோவிலைச் சேர்ந்த கோபுரங்களும், ஜம்புகேஸ்வரத்திலுள்ள கோவிலின் கோபுரங்களும், தீவிலுள்ள சோலைகளின் நடுவேயிருந்து கிளம்புவதாகத் தோன்றி ஆகாயத்தை யளாவிநிற்கும் காட்சி வெகு அழகாயிருக்கும். பால்ய முதல் மூப்புவரையில் உலகத்தில் மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை முதலிய வீணாசைகளால் கட்டுண்டுழன்று பரதவிக்காமல் சாசுவதானந்த போகவாசையைக் கொடுக்கவல்லதான இச்சோலைகளினடுவே மறைந்துகிடக்கும் அரிய நிக்ஷேபத்தைக் கைக்கொள்ள வாரும் சகத்தீரே யென்றழைப்பதுபோல,

"காடுங்கரையுமனக்குரங்கு கால்
விட்டோட வதன்பிறகே
ஓடுந்தொழிலாற் பயனுளதோ
வொன்ருய்ப் பலவாயுயிர்க் குயிராய்
ஆடுங்கருணைப் பரஞ்சோதி
யருளைப் பெறுதற்கன்புநிலை
தேடும்பருவமிது கண்டீர்
சேரவாருஞ் சகத்திரே."

யென்று சோலைகளினின்றும் மேலெழுந்து வானத்தை யளாவி நிற்கும் கோபுரங்கள் கூவியழைப்பதாகத் தோன்றுகின்றன.

கார்காலத்திலோ வானம் சரமாரிபொழிய் வெள்ளப் பெருக்கெடுத்து காவிரி கொல்லிட நதிகளின் இருகரைகளும் புரண்டு சிவப்பு நிறமுள்ள நீருடன் நுரைத்துக்கொண்டும் கரையோரங்களிலிருக்கும் மரங்களை வேர்ப் பிடுங்காய்ப் பிடுங்கி வாரியடித்துக்கொண்டும் பெரிய யானைகளையொத்த வைக்கோற் போர்களை மிதக்கடித்துக்கொண்டும் வெகு வேகத்துடன் தீவைச்சுற்றிக்கொண்டு சமுத்திரத்தை நோக்கிப் பிரவாகித்துச் செல்வதைக்குன்றின் மீதிருந்து நோக்கிட கம்பீரமான காட்சியை யளிக்கும்.

கிழக்குப்பக்கத்துக் காட்சி.

இந்தப்பக்கத்துத் தோற்றமும் அழகியதே. வெகுதூரம் பரந்த வாழைச்சோலைகளும், நெற்புலங்களும், கண்களைப் பறிப்பனவாயிருக்கும். ஒரு புறத்தில் வாழைக்கன்றுகள் நடுவதற்காக பூமியில் வரிசை வரிசையாய்க் கிடங்குகள் வெட்டப்பட்டு அவைகளில் தேக்கப்பட்டிருக்கும் தண்ணீர் சூரியகிரணங்களால் பிரகாசிப்பதும், மற்றோர்புறத்தில் சற்றே வளர்ந்த வாழைகள் இளங்காற்றில் மெதுவாய் அமைந்துகொண்டிருப்பதும், வேறோர்புறத்தில் முதிர வளர்ந்த வாழைக்கூட்டங்கள் தாறுகள் சாய்த்துக் கம்பீரமாய் நிற்பதும், இதுமாதிரியாகவே நெல்நாற்று நடுவதற்காக ஒருபக்கம் தண்ணீர் தேக்கப்பட்டிருப்பதும், மறறோர்புறம் இளம்பயிர்கள் தலைநிமிர்ந்து நிற்பதும், வேறோர்புறம் பொன்னிறமான கதிர்களையுடைய முதிர்ந்த பயிர்கள் தலை வணங்கிநிற்பதுமாகிய இக்காட்சி நேத்திரானந்தத்தை யுண்டாக்கும். நீர்ப்பாய்ச்சலின் உபயோகத்திற்காக கொல்லிடநதியின் குறுக்காகக் கட்டப்பட்டிருக்கும் (Grand Anicat) "பெரிய அணை"யும சற்றே தென்கிழக்கில் இருக்கும் திருவெறும்பூர் குன்றென்னும் ஒரு தட்டைப்பாறையின் மேரில கட்டப்பட்டிருக்கும் சிவாலயமும் அழகாய்க் காணப்படுகின்றன. தஞ்சைநகரிலுள்ள பிரசித்தமான சிவாலயத்தின் கோபுரமும் திரிச்சிராப்பள்ளிக்குன்றிலிருந்து நோக்கிடில் ஒரு சிறிய குச்சுப்போன்று தோன்றுகிறது.

இவ்வாறாக மலைக் கோட்டையிலிருந்து சுற்றிலும் பார்த்திடில் இயற்கையழகும செயற்கையழகுமாய்க்கலந்த அற்புதக் காட்சியை அனுபவிக்கலாம். இவ்வதிசயக் காட்சியை இவ்விடத்தில் ஒருவாறு எழுதப்புகுந்ததே யொழிய, நேரில் கண்டால் உண்டாகும ஆனந்தானுபவத்திற்கு இவ்விடத்தி லுரைத்திருப்பது கொஞ்சமேனும் ஈடாகாதென்பது நிச்சயம்."

## ON THE EFFICIENCY OF FAITH.

## கடவுளை நம்பினோர் கைவிடப்படார்.

திருச்சிராப்பள்ளிக்கு இரண்டு மயில் தூரத்தில் மேற்கே யுள்ளதும், முன்னொருகாலத்தில் சோழவமிச ராஜாக்களுடைய இராஜதானியாய் மிகச் சிறந்து விளங்கியதுமாகியது உரையூர் என்னும் பட்டணம் அநேகமாக எல்லாருக்குந் தெரிந்திருக்கலாம். சற்றேறக் குறைய இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்பு, அவ்வூர்ச் சிவாலயத்தின் கோபுரவாசலிலே, ஒருநாள் மாலைப்போதிலே, உத்தேசம் பத்து வயதிருக்கலாம் என்று மதிக்கக்கூடிய ஓர் அழகிய வாலிபன் வாடிய தாமரைமலர்போன்ற முகத்தோடுகூடியவனாய்க் கைகூப்பி நின்றுகொண்டு பின்வரும் பாடலொன்றைச் சொல்லித் துதித்துக்கொண்டிருந்தான்.

"நினையல்லால் பாலன் தனக்குண்டோபற்று."

"நறையூருங் கொன்றை நளிர்சடையாய்! நாளும்
உறையூருள் வாழு மொருவா! —கறையூரும்
நீல மணிமிடற்றாய்! நித்தா! நினையல்லால்
பாலன் தனக்குண்டோ பற்று."

என்னும் இந்த வெண்பாவைச் சிறுபிராயமுள்ள அவ்வாலிபன் பக்தி ப்ரவசனாய் இன்னிசையோடு உருக்கமாய்ப் பாடுவதை அங்கே வந்திருந்தவர்களெல்லாருங் கூட்டமாய் நின்றுகேட்டுக் கொண்டிருந்தார்கள். அப்போது அங்கே தற்செயலாய்ச் சுவாமி தரிசனார்த்தமாக வந்த காந்திமதிநாத முதலியார் என்னும் பெயரையுடைய பிரபு ஒருவர் உருக்கிவிட்ட தங்கம் போன்ற தனது மேனியில் கட்டுக்கட்டாய் விபூதியைப் பூசிக்கொண்டு கைகூப்பி நிற்கும் அப்பையனையும், அவனது சிவபக்தியையும், பட்டமரமும் பாலாயுருகும்படி சங்கராபரண ராகத்திலே பாடுகின்ற அப்பாடலையுங் கவனித்து, மிகவும் ஆச்சரிய மடைந்து, அவன் பாடிமுடிக்கும் வரை அங்கேயே நின்றுகொண்டிருந்து, பாடிமுடித்ததும், அப்பையனைக்கூப்பிட்டு, 'குழந்தாய்! நீயார்? உன்முகம் சிறிது வாட்டமடைந்திருப்பதுபோல் தோற்றுகின்றதே. அதற்குக் காரணமென்ன? உனக்குத் தாய் தகப்பனார் இருக்கிறார்களா?' என்று பிரியத்தோடு கேட்டார். அதற்கு அப்பையன் 'ஐயா! இவ்வூரில் மிக்க பிரவித்தியோடு ஏனாதி வேங்கடாசல முதலியார் என்று ஒருவர் இருந்ததாகத் தாங்கள் கேள்விப்பட்டிருக்கலாமே. நான் அவருடைய பேரன்; என் பேர் நல்லசாமி. எனக்குப்பிதா இல்லை. மாதாமாத்திரந்தான் இருக்கிறாள். பிதா சமீபத்தில் தான் சிவபதமடைந்தார். இன்னும் ஆறுமாதங்கூட ஆகவில்லை.' என்று சொல்லும்போதே அவனுடைய கண்களிலிருந்தும் முத்து முத்தாய் நீர்த்துளிகள் கீழே வீழ்ந்தன. பிரபு அதைக்கண்டு, 'அப்பா, குழந்தாய்! ஏன் விசனப்படுகிறாய். எல்லாந்தெய்வச்செயல். இருப்பதும் இறப்பதும் நம்முடைய செயலாக இல்லை. கொடுத்து வைத்தது அவ்வளவுதான். என்ன அழுதாலும் போனவர் திரும்பிவரப் போகிறார்களா? கண்ணீர்விட்டழுவதில் காரியமில்லை. நீயோ புத்திசாலியாகக் காணப்படுகிறாய். நீகூட இப்படி அழலாமா? இஃதிருக்கட்டும். உன் முகம் வாடியிருப்பதற்குக் காரணமென்ன வென்று கேட்டேனே. அதற்கு ஏன் பதில் சொல்லாதிருந்துவிட்டாய். உன் மனத்திலிருக்கின்ற குறையென்ன? சாத்தியமானால் நான் என்னாலியன்ற வரையில் அக்குறையை நிவர்த்திக்க வழிதேடுகிறேன். ஒளிக்காமல் உள்ளது உள்ளபடியாகச் சொல்லு' என்று சொல்லி அப்பையனுடைய முதுகைத் தடவிக்கொடுத்துக் கேட்டார்.

"தோழனோடும் ஏழமை பேசேல்."

அதற்கு அந்தப்பையன் மிக்க வணக்க ஒடுக்கத்தோடு "ஐயா! 'தோழனோடும் ஏழைமை பேசேல்' என்ற வசனத்தை நினைத்து, நம்முடைய கஷ்டாகஷ்டங்களை யெல்லாம் பிறரிடம் சொல்லுவானேன் என்று எண்ணி நான் தாங்கள் கேட்டதற்கு உத்தரஞ் சொல்லவில்லை. அதற்காக என்னை மன்னிக்கவேண்டும். இவ்வளவுதூரம் தாங்கள் விசுவாசத்தோடு கேட்கிறபடியால் சொல்லுகிறேன், கேளுங்கள் என்று அவன் வரலாற்றைப் பின்வருமாறு சொல்லலுற்றான்.

"இந்த மாதத்திற்கு இன்னும் சம்பளம் செலுத்தவில்லை."

நான் திருச்சிராப்பள்ளியில் நாஷனல் ஹைஸ்கூலில் 4-வது பாரத்தில் படிக்கிறேன். இந்தமாதத்திற்கு இன்னும் சம்பளம் செலுத்தவில்லை. தேதி இருபதிற்குமேல் ஆகிவிட்டபடியால் சம்பளங்கொண்டுவராமல் வகுப்பில் உட்காரக்கூடாதென்று சொல்லி உபாத்தியாயர் என்னை வீட்டுக்கனுப்பிவிட்டார். இதுவரையில் தவறாமல் சம்பளம் அனுப்பிவந்த என் மாமா, 'இனிமேல் என்னால் பையனுக்குச் சம்பளம் அனுப்பமுடியாது. குடும்ப நிர்வாகமே நிரம்பவும் கஷ்டமாயிருக்கிறபோது புத்தகம்சம்பளம் முதலியவைகளுக்குப் பணங்கொடுத்துப் பையனைப் படிக்கவைப்பது அசாத்தியமான காரியமாகத் தோற்றுகின்றது. எங்கேயாவது ஒரு செட்டிகடையில் கணக்கு

வழக்குகளைத் தெரிந்துகொள்ளும்படி பையனை யனுப்புவதுதான் உசிதம்' என்று கரூரிலிருந்து நேற்றுக் கடிதமெழுதிவிட்டார். அவரைத்தவிர வேறு யாரும் எங்களை ஆதரிப்பாரில்லை. ஒரு பரீக்ஷையாவது கொடுப்போம் என்று எண்ணியிருந்த என் எண்ணம் திடீரென்று இப்படி வீணாய்ப்போனதை நினைக்கச் சிறிது விசாரமுண்டாயிற்று. இதுதான் என் முகவாட்டத்திற்குக் காரணம்" என்று சொன்னான்.

"இந்தா இதை வைத்துக்கொள்."

இதைக்கேட்டதும் காந்திமதி முதலியாரது மனம் இளகிவிட்டது உடனே தம் சட்டைப்பையிலிருந்து ஒரு நூறு ரூபா நோட்டை யெடுத்து 'இந்தா இதை வைத்துக்கொள். இன்னமும் அவசியமானபோது எழுது! வேண்டியதை அனுப்புகிறேன். இனி உனக்குப் பணக்கவலை யென்பதுவேண்டாம். எவ்வளவு தூரம் உனக்குப் படிக்கவேண்டுமென்று ஆசையிருக்கிறதோ அதுவரையிலும்படி. புத்தகமோ, சம்பளமோ, எது வேண்டியிருந்தாலும் நான் தருகிறேன்! என்று சொன்னார். நல்லசாமி அந்த நோட்டைப் பெற்றுக்கொள்ளாமலே, "ஐயா, ஏழையாகிய என்மீது மிக்க இரக்கங்கொண்டு தாங்கள் கூறிய அருண்மொழியை இங்கே எழுந்தருளியிருக்கின்ற சிவபிரானது மொழியாகவே நான் நினைக்கிறேன். எனது மாதா அல்லது மாமாவினது அனுமதியின்றி நான் இந்த ரூபாயைப்பெற்றுக்கொள்வது கூடாது. நாங்கள் கஷ்டஜீவனம் பண்ணிக்கொண்டிருந்தாலும் இதுவரையில் பிறரிடங் கைநீட்டி யாதொன்றையும் யாசித்ததில்லை.

"எனக்கு இதுவேண்டாம்."

பேரருளோடு தாங்களாகவே யுபகரிக்கின்ற இது, யாசனமாகாவிடினும் பெரியோர்களுடைய அபிப்பிராயத்தையறியாமல் நான் இதைப் பெற்றுக்கொள்வதற்கில்லை. மேலும், மிகப் பெருந்தொகையாகிய இதை நான் அவர்களிடங்காட்டினால், எனக்கு இது ஒருவரால் இரங்கிக் கொடுக்கப்பட்டதென்று அவர்கள் நம்பமாட்டார்கள். தவிர, என் நடத்தையிலும் சந்தேகப்படுவார்கள். ஆகையால், எனக்கு இது வேண்டாம். இங்ஙனம் மறுப்பதற்காகத் தாங்கள் என்மீது கோபிக்காமலிருக்கப் பிரார்த்திக்கின்றேன்" என்று மிகுந்த வணக்கத்தோடு தன் குலப்பெருமை தோன்றப் பதிலுரைத்தான்.

"விளையும் பயிர் முளையிலே தெரியும்."

வாலிபனது இவ்வார்த்தையைக் கேட்டதும் அப்பிரபு முன்னையினும் பதின்மடங்கு மகிழ்ச்சியும் இரக்கமுங்கொண்டு, "விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்றபடி இவன் அதிமேதாவியாய் ஒருகாலத்திலே நல்ல பேரும் பிரதிஷ்டையும் பெற்று ஒரு பெரிய கனவானாக வாழ்வான் என்பது இவன் இப்போது பேசும் வார்த்தைகளினால் நன்றாக வெளியாகின்றது. எப்படியாவது நாம் இப்பையனை முன்னுக்குக் கொண்டுவரவேண்டும். மேலும், இவன் நம்முடைய குலத்தைச் சேர்ந்தவனாகவும் இருக்கிறான். இவனை நல்ல ஸ்திதிக்குக் கொண்டு வந்தால் நம்முடைய குலத்துக்கே ஒரு கவுரவம் உண்டாகும்" என்று இவ்விதம் தம் மனத்திலே சிந்தித்து, 'அப்பா, நல்லசாமி! பெரியோர்கள் வைவார்களோ என்ற யோஜனை உனக்கு வேண்டாம். நான் ஒரு கடிதம் எழுதித்தருகிறேன். இதை உன் தாயாரிடம் கொண்டுபோய்க்கொடு; மாமாவுக்கும் இதை அனுப்பச்சொல். அவர்கள் பார்த்து என்ன சொல்லுகிறார்களோ அந்தப்படி செய். அவர்களுக்கு இந்தப் பணத்தைப் பெற்றுக்கொள்ள இஷ்டமில்லையானால் கடிதத்திற்கண்ட என் விலாசத்திற்கு திருப்பி யனுப்பிவிடட்டும்' என்றுசொல்லி ஒருகாகிதத்தையும் நூறுரூபாய் நோட்டையும் அப் பையனிடங்கொடுத்து, 'குழந்தாய்! நாழிகையாகிறது; முன்னிருட்டு; ஜாக்கிரதையாகப் போதோடு வீட்டுக்குப்போ. நோட்டைத் தலைப்பிலே முடிந்துகொள். நாளைக்கே திருநெல்வேலி விலாசத்திற்குக் கடிதமெழுது.' என்று சொல்லிப் பையனைத் தட்டிக்கொடுத்து அனுப்பினார். நல்லசாமி காகிதம் நோட்டு இரண்டையும் பெற்றுக்கொண்டு "ஐயா! போய் வருகிறேன். உத்தரவு கொடுங்கள். தாங்கள் செய்த இப்பேருபகாரத்தை நான் ஒருநாளும் மறக்கமாட்டேன்" என்று அவருக்கு வந்தனம் செலுத்திவிட்டு, ஆலயத்தைப் பிரதக்ஷிணம் செய்து, ஸ்வாமியைத் தரிசித்துத் தனக்குத் தெரிந்த தோத்திரப் பாடல்களைச் சொல்லி வணங்கி, விபூதிப் பிரஸாதத்தையும் பெற்றுக்கொண்டு இருட்டுக்குமுன வீடுபோய்ச் சேர்ந்தான்.

"இந்தா இந்தக் கடிதத்தைப் பார்."

வெளியிற்போன பையன் இன்னும் வரவில்லையேயென்று விசாரத்தோடு தன் குமாரனது வருகையை எதிர்பார்த்து வாசற்படியிலேயே நின்றுகொண்டிருந்த அவனது தாயார் அம்மணி அம்மாள் பையனைக் கண்டதும், "அப்பா, நல்லசாமி! என் இத்தனை நேரம்? இரண்டாந்தரங்கூடச் சாப்பிடவில்லையே. வீட்டிலுள்ளவர்கள் விசாரப்படுவார்களே என்பதை நீ கவனிக்கிறதேயில்லை. போகட்டும். இனிமேலும் இப்படி வராதே. எங்கே போனாலும் என்ன

காரியமிருந்தாலும் அஸ்தமிக்கிறதற்குமுன் இங்கே வந்துவிடு" என்று சொன்னாள். நல்லசாமி: "அம்மா! இன்றைத்தினம் ஸ்வாமி தரிசனத்திற்குப் போனேன். போனஇடத்தில் ஒரு பெரிய மனுஷ்யரைக் கண்டு பேசும்படி நேரிட்டது. அதுதான் தாமதத்திற்குக் காரணம். இந்தா இந்தக் கடிதத்தைப் பார்" என்று தன் கையிலிருந்த கடிதத்தை நீட்டினான். அம்மணி அம்மாள் அந்தக்கடிதத்தை, "யாரப்பா கொடுத்தார்?" என்று சொல்லிக்கொண்டபடியே வாங்கி வாசித்தாள். அதிற் பின்வருமாறு எழுதியிருந்தது:—

"உபயக்ஷேமம். என்னை இன்னானென்று நீங்கள் தெரியாமலிருக்கும்போது நான் உங்களுக்கு இக்கடிதம் எழுதத்துணிந்த பெரும்பிழையை மன்னிக்கக் கேட்டுக்கொள்கிறேன். தங்கள் குமாரன் சிரஞ்சீவி நல்லசாமியை நான் இன்று சாயங்காலம் சந்தித்தேன். அவனுடைய குணமும், சிவபக்தியும், பணிவும் என் மனத்தை முற்றிலுங் கவர்ந்துவிட்டன. மிக்க ஸந்தோஷத்தினால் நான் அவனுக்குக் கொடுத்த ரூபா நூறையும் தாங்கள் அங்கீகரிக்கும்படி பன்முறையும் பிரார்த்திக்கிறேன். தங்கள் பெரியவர்களுக்கும் என் முன்னோர்களுக்கும் சம்பந்தமிருந்து விட்டுப்போனதை நான் தங்கள் குமாரன் மூலமாகப் புதுப்பித்து விருத்தி செய்துகொள்ள விரும்புகிறேன். தங்கள் குமாரனை என் கிருகத்திலேயே வைத்துக்கொண்டு படிப்பிக்கிறதற்குத் தாங்கள் அனுமதி கொடுப்பீர்களானால் நான் அதைப் பெரிய பாக்கியமாக நினைப்பேன். தங்கள் கடிதத்தை ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

இங்ஙனம் தங்கள் அன்புள்ள,
காந்திமதிநாதன்".

"அம்மா நாளைக்கே நான் பள்ளிக்கூடத்திற் சேர்ந்து படிக்கலாமல்லவா."

இக்கடிதத்தைப் பார்த்ததும் அம்மணியம்மாளுக்குண்டாகிய மெய்ப்பாட்டை நாம் இங்கே எழுதுவது ஸாத்தியமல்ல. ஒருமுறைக் கிருமுறையாக அக்கடிதத்தைப் படித்துப்பார்த்தாள். சிறிது நேரம் வாய்பேசாமல் நின்று, பற்பலவிதமான விஷயங்களைச் சிந்தித்துக்கொண்டிருந்தாள். அப்போது அங்கே அவளது இன்னுயிர்த்தோழியாகிய ரங்கநாயகி அம்மாள் வந்துபோனதைக்கூட அவள் பார்க்கவில்லை. அம்மணி, அம்மணி, என்று பலதரம் கூப்பிட்டதும் அவள் காதில் விழவில்லை. இந்த நிலையில், பித்துப் பிடித்தவள்போலப் பதினைந்து நிமிஷம் வரையில் ஒன்றுந் தோன்றாமலிருந்துவிட்டு, 'நல்லது, நல்லசாமி! பணம் எங்கே' என்று கேட்க, பையன், 'அம்மா, இதோ பார்' என்று சொல்லித் தன் தலைப்பில் முடிந்து வைத்திருந்த அந்த நூறுரூபா நோட்டை எடுத்துத் தன் தாயாரிடங்கொடுத்தான். அவள் அதை வாங்கிப் பத்திரமாய்ப் பெட்டியில் வைத்துப் பூட்டிவிட்டு, 'அப்பா, மற்றதெல்லாம் அப்புறம் பேசிக்கொள்வோம்; கைகால்களைச் சுத்தி செய்துகொண்டு சாப்பிடவா' என்றதும், 'அப்படியே, இதோ வந்துவிட்டேன்' என்று சரேலென நல்லசாமி கைகால்களைச் சுத்தி செய்துகொண்டு சாப்பிட உட்கார்ந்தான். அம்மணியம்மாள் இலைபோட்டுப் பரிமாறினாள். அப்போது அப்பையன் சாப்பிட்டுக்கொண்டிருக்கும்போதே தன் தாயாரைப்பார்த்து, "அம்மா, நாளைக்கே நான் பள்ளிக்கூடத்திற் சேர்ந்து படிக்கலாமல்லவா. நேற்றைப் பாடம் மாத்திரந்தான் விட்டுப்போயிருக்கிறது. சனி ஞாயிற்றுக் கிழமையில் அதைப்படித்துவிடுவேன். நாள்கழித்துப்போனால் படிப்பது கஷ்டமாயிருக்கும். என்ன, ஒன்றுஞ் சொல்லாமலிருக்கிறாய்? பணத்தைத் திருப்பி அனுப்பிவிடப்போகிறாயோ?" என்று கேட்டான். அதற்கு அம்மணியம்மாள் தன் கருத்தை வெளியிடாமலே, பையன் என்னசொல்லுகிறான் பார்ப்போம்என்று நினைத்து, "ஆமாம், திரும்பி யனுப்பத்தானே வேண்டும். யாரோ முன்பின் தெரியாத ஒருவரிடத்திலிருந்து நாம் பணத்தை வாங்கிக்கொள்வது சரியா? பார்க்கிறவர்கள் பரிகாசம் பண்ணமாட்டார்களா?" என்று பதில் சொன்னாள். தாயார் சொன்ன இவ்வுத்தரத்தைக் கேட்டதும் நல்லசாமி "அம்மா, பணத்தைத் திருப்பியனுப்புவது சரியன்று; அந்தப் பெரியமனிதர் இதை அவமரியாதையாக நினைப்பார். நமக்குப் பூர்வபந்துவாயும், பெரியபிரபுவாயும் இருக்கும் அவரிடத்தில் நாம் எந்த உபகாரத்தையும் பெறலாம். நீ நினைக்கிறபடி, அதை எவரும் இழிவாக நினைக்கமாட்டார்கள். மாமாவையும் ஒரு வார்த்தை கேட்டு விட்டுப் பின் சௌகரியம்போலச் செய்" என்று சொன்னான். 'நல்லது உன் இஷ்டப்படியே செய்கிறேன். காலைவண்டிக்குக் கரூருக்குப்போய் நேரில் கலந்து பேசித் தீர்மானம்பண்ணிக்கொண்டு இராத்திரி வந்துவிடுகிறேன். நீயுங் கூட வருகிறாயா?' என்று அம்மணியம்மாள் கேட்க, நல்லசாமியும் வருகிறதாக ஒப்புக்கொண்டான். அன்றிரவு போஜனம் முடிந்ததும் தாயும் மகனும் வெகுநேரம் வரை இவ்விஷயமாகவே பேசிக்கொண்டிருந்து பிறகு சிறிது கண்ணயர்ந்தார்கள்.

II

"கற்கை நன்றே கற்கை நன்றே
பிச்சை புகினுங் கற்கை நன்றே."

"எல்லாம் பசுபதீசுவரன் கிருபை, நம்மால்
என்ன முடியும்."

மறுநாட் காலையில் அம்மணியம்மாள் தன் குமாரனையுமழைத்துக்கொண்டு கரூரில் தன் சகோதரரிருக்குமிடத்துக்கு வந்துசேர்ந்தாள். அப்போது, ரயிலுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்த அவள் சகோதரர் சிதம்பரநாத முதலியார் என்பவர் இவர்களைக்கண்டதும் பயணத்தை நிறுத்தி, "வா, அம்மா ; நல்லதாச்சு! உட்காரு. இப்போது நான் அங்கே வருவதற்காகத்தான் பிரயாணப்பட்டுக்கொண்டிருந்தேன் நல்லவேளையாய் நீங்களே இங்கு வந்துவிட்டீர்கள் நிரம்பவும் ஸந்தோஷம். திடீரென்று நீங்களிருவரும் புறப்பட்டு வந்ததற்குக் காரணம் என்ன?" என்று கேட்க, அம்மணியம்மாள் உத்தரமொன்றுஞ் சொல்லாமலே, கடிதத்தையும் நூறுரூபா நோட்டையும் தமையன் கையில் கொடுத்தாள். வாங்கி வாசித்துப்பார்த்துவிட்டுப் பரம ஸந்தோஷத்துடன், "எல்லாம் நல்லசாமியினுடைய அதிர்ஷ்டந்தான். மகாயோக ஜாதக மென்று சோதிடர்கள் சொல்லியிருக்கிறார்கள். தீர்க்காயுளுடன் க்ஷேமமாயிருக்கவேண்டும். எல்லாம் பசுபதீசுவரன் கிருபை நம்மாலென்ன முடியும்? எனக்கும் நேற்று ஒரு கடிதமெழுதியிருக்கிறார். விசாரித்ததில் அக்காந்திமதிநாத முதலியார் நம்முடைய குடும்பத்தார்க்கு உறவாம். பெரிய பிரபுவென்று கேள்வி. ஆண் ஸந்ததி யில்லையாம். ஒரே யொரு பெண்தானாம். அந்தப்பெண்ணை நல்ல இடத்தில் கொடுத்து மாப்பிள்ளையை வீட்டோடு வைத்துக் கொள்ளவேண்டுமென்ற அபேக்ஷையுடனிருப்பதாகத்தெரிந்தது. நல்லசாமியை அங்கே யழைத்துக்கொண்டுபோய்ப் படிப்பிக்க விரும்புவதுங்கூட இந்த அபிப்பிராயத்தைக் கொண்டுதான். உனக்கு எழுதியிருக்கும் கடிதத்தில் அது குறிப்பாகத்தெரிகிறது. நம்முடைய கவுரவத்தை நினைத்துப் பையனுடைய க்ஷேமத்தைக் கெடுப்பது நியாயமன்று பையனை யனுப்பிவிடவேண்டுமென்று நினைக்கிறேன். அம்மணி, உன் அபிப்பிராயமென்ன? நல்லசாமி என்ன சொல்லுகிறான்? என்ன தீர்மானம் செய்திருக்கிறீர்கள்?" என்று சிதம்பரநாதமுதலியார் தம் சகோதரியைக் கேட்டார்.

'தெய்வம் வேண்டியவரையில் என் விஷயத்தில்
சோதித்தாய்விட்டது.'

அதற்கு அந்த அம்மணி "எங்களுக்கென்ன தெரியும், யோஜிக்கவும் தீர்மானிக்கவும். நீங்கள் பார்த்து எதைச்சொன்னாலும் அப்படியே செய்யக் காத்திருக்கிறோம். உங்களுக்கில்லாத கவலையும் பொறுப்பும் எனக்கென்ன இருக்கிறது? உங்கள் பாடு, பையன் பாடு. எப்படியாவது க்ஷேமமாக இருக்கவேண்டும். தெய்வம் வேண்டிய வரையில் என் விஷயத்தில் சோதித்தாய் விட்டது. குழந்தையாவது கஷ்டமில்லாமலிருக்கட்டுமே" என்றாள். இப்படிச் சொல்லி முடிக்கும்போது கடிகாரத்தில் ஒன்பதுமணி யடித்ததைப் பார்த்துச் சகுனமும் நன்றாகத்தானிருக்கிறது என்று தம் மனத்தில் அதிக ஸந்தோஷமடைந்தவராய், "சரி, நீங்கள் ஸ்நானத்தைப்பண்ணிச் சாப்பிடுங்கள். நான் காலையிலே போஜனஞ் செய்தாய்விட்டது. தபாலாபீசு வரைக்கும் போய்வருகிறேன்" என்று சொல்லிவிட்டுச் சிதம்பரநாத முதலியார் வெளியே போய்விட்டார்.

"உத்தமமான காரியம்."

இங்கே இப்படியிருக்க, திருநெல்வேலிக்குத் திரும்பிச்சென்ற காந்திமதிநாத முதலியார் தம் வீட்டிற்குப் போனதும் தமக்கு ஆப்தமான சில பந்துக்களையும் சிநேகிதர்களையு மழைத்துவரச்சொல்லி, உறையூரில் தாம் கண்ட பையனையும், அவனது குடும்ப வரலாற்றையும், அவனது ரூபம், வயது, கல்வி, குணம், தெய்வபக்தி முதலியவைகளையும்பற்றிச் சொல்லி, "அவனுக்கு என்னுடைய பெண்ணைக் கலியாணஞ் செய்துகொடுக்க உத்தேசம் இருக்கிறது. அதைத் தற்காலம் வெளியிடாமல், பையனை மாத்திரம் அழைத்து வந்து படிப்பித்து அவன் பரீக்ஷையில் தேறிய பின்னர், இந்த அபிப்பிராயத்தை வெளியிடப்போகிறேன் ; இவ்விஷயத்தில் உங்களபிப்பிராயம் எப்படி யிருக்கிறது?" என்று யோஜனை கேட்க, அவர்களெல்லாரும், 'உத்தமமான காரியம். சமான சம்பந்தமென்றால் இதைத்தான் சொல்லவேண்டும். ஏனாதி வேங்கடாசல முதலியாரென்றால் அழுதபிள்ளையும் வாய்மூடும். நம்முடைய குலத்தில் ஏனாதி என்ற பட்டத்தை முதன்முதல் பெற்றவர் அந்தக் குடும்பத்தவர்தாம். நல்ல யோஜனை. அப்படியே செய்யுங்கள். பையனை உடனே வரவழையுங்கள்.

இதனுல் கவுரவம் புண்ணியம் இரண்டுமுண்டு. இன்னெரு தரம் இதைப்பற்றி யோசிக்க வேண்டாம்'' என்று ஒரே மனதாய்ச் சொன்னுர்கள். "நீங்களெல்லாரும் அனுமதி கொடுத்தால் செய்கிறேன்'' என்று சொல்லி வாய்மூடுமுன், தபாற்காரன் ஒடிவந்து ஒரு தந்தியைக் கொண்டுவந்து கொடுத்தான். சாந்திமதிநாத முதலியார் அதை வாங்கி உடைத்தார். அதிற் கண்ட விஷயமாவது:—"சிரஞ்சீவி நல்லசாமியை அழைத்துப்போகத் தடையில்லை. யாரையாவது தங்கள் காரியஸ்த ரொருவரை யனுப்பப் பிரார்த்திக்கிறேன். தங்கள் பேருபகாரத்தை நான் என்றும் மறவேன். இங்ஙனம்,

சரூர் - சிதம்பரநாத முதலியார்.''

"பயலே, நல்ல பையன் என்று பேரெடுக்க வேண்டும்.''

இந்தத் தந்தியை மற்று அங்கே வந்திருந்தவர்களும் வாங்கி வாசித்துப்பார்த்து, "சந்தர்ப்பம் நிரம்பவும் நன்ருக இருக்கிறது. காரியஸ்தரை அனுப்புவதாகத் தந்திகொடுத்துவிடுங்கள்'' என்று சொல்லவே, "உங்களபிப்பிராயப்படியே செய்கிறேன்'' என்றுரைத்து அவர்களை மரியாதை செய்தனுப்பிவிட்டுச் சிறிதும் தாமதியாமல் காந்திமதிநாத முதலியார் பதில் தந்தி கொடுத்துவிட்டார். சாயங்காலம் ஐந்து மணிக்கெல்லாம் தந்தி கரூர்போய்ச் சேர்ந்துவிட்டது. தந்தி வந்த சமயத்தில் சிதம்பரநாத முதலியார் வீட்டிலில்லை. அவருக்காகக் கையெழுத்துச் செய்து நல்லசாமி அதை வாங்கிக்கொண்டான். ஆறுமணியாகியும் தன் தமையன் வராமையால் அம்மணியம்மாள் தன் குமாரனைக் கூப்பிட்டு, "நல்லசாமி! மாமா அனேகமாகக் கோயிலில்தான் இருப்பார். தந்தியைக் கொண்டு போய்க் கொடு. அவசரகாரியமாக இருந்தாலும் இருக்கலாம். நாம் அவர் வருகிறவரையில் இங்கே வைத்திருப்பது தவறு. சீக்கிரம் போ'' என்று சொல்லவே, நல்லசாமி அந்தத் தந்தியை எடுத்துக்கொண்டு ஆலயத்தை நோக்கிப் புறப்பட்டான். சிறிதுதூரஞ் சென்றதும், மாமாவை வழியிலே சந்தித்து, "மாமா! தங்களுக்கு ஒரு தந்தி வந்திருக்கிறது. ஐந்து மணிக்கே வந்துவிட்டது. இதுவரையிலும் வராமையால் எடுத்துக்கொண்டுவந்தேன்'' என்று சொல்லித் தந்தியைக் கொடுத்தான். "ஐந்துமணிக்கே வந்துவிட்டதா? வெகு சீக்கிரமாக இருக்கிறதே. நாளைக்குத் தான் வருமென்று நினைத்தேன்'' என்று சொல்லிக்கொண்டே அந்தத் தந்தியைப் பிரித்துப் பார்த்து மிக்க மனமகிழ்ச்சியினுல் உடல்பூரித்தவராய், "பயலே! உன்னை அழைத்துப்போக நாளை மனுஷ்யரையனுப்புவதாக எழுதியிருக்கிருர். திருநெல்வேலிக்குப் போகிருயா? தனியாய் இருக்கமுடியுமா? நல்லபையன் என்று பேரெடுக்கவேண்டும். கெட்ட பிள்ளைகளோடு சேர்ந்து தறிதலைபென்று சொல்லும்படி திரியாதே'' என்று இவ்விதம் மருமகனுக்குப் புத்திபுகட்டிக்கொண்டபடியே அதிவேகமாகச் சிதம்பரநாத முதலியார் தமது வீட்டுக்கு வந்தார்.

"சுபகாரியங்களைச் சீக்கிரமாகவே செய்யவேண்டும்.''

அப்போது, கூடத்திலே போட்டிருந்த ஊசலிலுட்கார்ந்து சிவரகசியம் என்னும் இதிகாசத்தைப் படித்துக்கொண்டிருந்த அம்மணியம்மாள் தமையனைக் கண்டதும் எழுந்திருந்து, 'தந்தியில் விசேஷமுண்டோ?' என்று வணக்கமாகக் கேட்க, "ஆம், நல்லசாமியையழைத்துப்போக நாளை உதயத்திற்கு இங்கே முதலியாரவர்கள் காரியஸ்தர் திருநெல்வேலியிருந்து வரப்போகிருர். வியாழன் தெற்கே சூலம், வெள்ளி சனிக்கிழமைகள் அவ்வளவு சிலாக்கியமான நாட்களாக இல்லையாம். ஆகையால், நாளைப் புதன்கிழமை சாயங்கால வண்டிக்கே பையனை யனுப்ப வேண்டுமென்று கண்டிருக்கிறது. சுபகாரியங்களைச் சீக்கிரமாகவே செய்யவேண்டும். அனுப்பலாமல்லவா?'' என்று முதலியார் தமது சகோதரியை நோக்க, அந்த அம்மாள், "என்னைக் கேட்பானேன்? மனம்போல அனுப்புங்கள், 'கைம்பெண் வளர்த்த கசடன்' என்று பேரெடுக்காமல், குழந்தை நாலெழுத்துப் படிக்கும்படியாயிருப்பதை நான் ஏன் தடை செய்யவேண்டும்? இஷ்டப்படியே அனுப்புங்கள். போகும்போது நல்லதாக இரண்டு அங்கவஸ்திரம் வாங்கிக்கொடுங்கள். இருப்பதெல்லாம் கிழிசல். உடுத்திக்கொள்ள முடியாமலிருக்கிறது'' என்று சொன்னுள். "இரண்டுக்கு நாலாக வாங்கிக்கொடுக்கிறேன். துணிக்குக்கூடவா பஞ்சம் வந்துவிட்டது. அஃதிருக்கட்டும்.

"அரைக்கீரையில் பிரியம் அதிகம்.''

தகுந்த இடத்திலிருந்து வருகிறபடியால் நாமும் ஏற்றபடியாக அவர்களை உபசரிக்கவேண்டும். அந்தப் பக்கத்தார்க்கு அரைக்கீரையில் பிரியம் அதிகம். வாச

லில் வந்தால் வாங்கி வை. ஆம்பிரவதியில்தான் ஸ்நானத்துக்குப் போவார்கள். எதற்கும் கொஞ்சம் வென்னீரும்போட்டு வை. ரயில் 8-மணிக்கு இங்கே வருகிறது. பலகாரம் பண்ண முடியுமானால் பண்ணு. இல்லையானால் காப்பி மாத்திரம் சித்தமாக இருக்கட்டும். சிறுமலைப்பழம் வாங்கி வைத்திருக்கிறேன், போதும். சமையல் பத்து மணிக்குள்ளாக நடக்கவேண்டும்'' என்று சொல்லிவிட்டுச் சிதம்பரநாத முதலியார், மறுநாள் ரயிலுக்குப்போக வண்டி திட்டம் பண்ணுவதற்காக வெளியே போய்விட்டு, இரவு 10-மணிக்குத் திரும்பிவந்தார். வந்ததும் எல்லாருமாகப் போஜனஞ்செய்ய உட்கார்ந்தார்கள். சாப்பிடும்வேளை தொடங்கி நித்திரை போகும்வரை இவ்விஷயத்தைப் பற்றியே வீட்டிலுள்ள எல்லாரும் பேசிக்கொண்டிருந்தார்கள்.

"வாருங்கள்."

சிதம்பரநாத முதலியார் அதிகாலையிலேயே எழுந்திருந்து காலைக்கடன்களையெல்லாம் முடித்துக்கொண்டு, கடைக்குப்போய் விருந்துக்குவேண்டிய கறிகாய்களையும் பழவகைகளையும் வாங்கி வீட்டிற்கனுப்பிவிட்டு எட்டடிப்பதற்குச் சிறிது முன்னாகவே முதனாளிரவு திட்டஞ்செய்து வைத்திருந்த குதிரைவண்டியில் ஏறிக்கொண்டு ரயிலடியிற்போய்க் காத்துக்கொண்டிருந்தார். எட்டடித்துப் பத்து நிமிஷத்திற்கெல்லாம் வண்டியும் வந்துவிட்டது. இரண்டாவது வகுப்பிலிருந்து ஒரு பெரிய மனுஷ்யரும், அவரது நிலைமைக்குச் சிறிது தாழ்ந்தவரென்று மதிக்கக்கூடிய மற்றொருவரும் கீழே இறங்கினார்கள். சிதம்பரநாத முதலியார், அவர்களைக்கண்டு வணங்கித், 'தாங்கள்தாம் திருநெல்வேலியிலிருந்து வருகிறீர்களோ?' என்றுகேட்க, 'ஆம். நாங்கள்தாம். நான் முதலியாரவர்களது மைத்துனன். இவர் எங்கள் குடும்ப காரியஸ்தர். மாப்பிள்ளையை அழைத்துப் போவதற்காக வந்தோம்' என்று அவ்விருவர்களில் பிரதானமாகக் காணப்பட்டவர் பதிலுரைத்தார். 'ரொம்பவும் ஸந்தோஷம். தங்களுடைய மாப்பிள்ளையென்று சொல்லும்படியான அவ்வளவு பெரிய பாக்கியம் நல்லசாமிக்கு இவ்வளவு சமீபத்திலிருப்பதை நாங்கள் தெரிந்துகொள்ளவில்லை. ஏழையென்ப தொன்றைத்தவிரப் பையனுக்கு வேறு ஒரு குறையுமில்லை. மகா புத்திசாலி. முகத்தில் லக்ஷ்மீ விலாசமிருக்கிறது. என் மருமகப் பையனென்று நான் சொல்லவில்லை. உள்ளபடி அவன் மகாகுணசாலி. அதிர்ஷ்டமும் அதற்கேற்றபடி ஒத்திருக்கின்றது. வாருங்கள். நாழிகையாகிறது. வெகுதூரத்திலிருந்து வருகிறீர்கள். போஜனத்துக்குப் பிறகு சாவகாசமாய் வார்த்தை சொல்லிக்கொள்ளலாம். யாரடா, வண்டிக்காரன் சமான்களை வண்டியிலெடுத்துவை. தாங்கள் வண்டியிலேறிக்கொள்ளலாம்' என்று விநயமாக வார்த்தை சொல்லி அவ்விருவர்களையும் தம் வீட்டிற்கு அழைத்துவந்தார்.

"விருந்துபசாரம்"

வண்டியைவிட்டுக் கீழே இறங்கியதும் சிதம்பரநாத முதலியார் அவ்விருந்தினரிருவர்களையும் உள்ளே அழைத்துக்கொண்டுபோய்க் கூடத்தில் விரித்திருந்த உயர்ந்த ரத்னகம்பளத்தில் உட்காரும்படி செய்து ஒரு வெள்ளித்தட்டில் தாம்பூலம் கொண்டுவந்து வைத்துவிட்டு, 'இன்று ஸுதினம். தங்களைப்போன்றவர்களுடைய தரிசனமும், பரிச்சயமும் எனக்குக்கிடைத்தது. எல்லாம் பெரியவர்களுடைய அனுக்கிரகந்தான்' என்று சொல்ல, 'எங்களுக்குமுன் தாங்கள் முந்திக்கொண்டீர்கள். இவ்வளவும் நாங்கள் சொல்லவேண்டிய வார்த்தைகள். உங்களைப்பற்றியும், உங்களுடைய முன்னோர்களைப்பற்றியும் நாங்கள் வெகுவாகக் கேள்விப்பட்டிருக்கிறோம். உங்களுடைய சம்பந்தம் இப்போது கிடைத்ததைப்பற்றி நாங்கள் அடைந்துள்ள ஸந்தோஷத்திற்களவில்லை. இந்த ஸம்பந்தம் மேன்மேலும் அபிவிருத்தியடையும்படி பகவான் கிருபை செய்யவேண்டும்' என்று முதலியாரது மைத்துனராகிய சூலிவாடீசுர முதலியாரும் உபசாரமாகச் சொன்னார். இவ்விதம் சிறிது நேரம்வரை அவ்விருவரும் அளவளாவிக்கொண்டிருந்தார்கள். பிறகு எல்லாருமாக ஆம்பிரவதி நதியில் ஸ்நானஞ்செய்து, பூஜையை முடித்துக்கொண்டு போஜனத்திற்குட்கார்ந்தார்கள். பொரியல், அவியல், வறுவல், துவையல் முதலிய கறிவகைகளும், வாழை, மா, பலா முதலிய கனிவகைகளும், லட்டு ஜிலேபி முதலிய பக்ஷணவகைகளும், சித்திரான்னங்களும் தேவாமிர்தமாகச் செய்யப்பட்டிருந்தன. விருந்தினரிருவரும், "இதென்ன, பிரமாதமாயிருக்கிறதே! இன்னதைச் சாப்பிடுகிறதென்றுகூடத் தெரியவில்லை. ஒன்றுக்கொன்று சுவையுள்ளதாயிருக்கிறது. எங்கள் பக்கத்தில் கலியாணகாலத்திலேகூட இவ்வளவு செய்யமாட்டார்கள். செய்யவும் தெரியாது. சாப்பிடுவதற்கு வயிற்

தில் இடமில்லையே யென்ற குறைதான் பெரிதாக இருக்கின்றது" என்று சொல்லித் துதித்துக் கொண்டே திருப்தியாய்ப் போஜனஞ்செய்தார்கள். போஜனானந்தரம், நல்ல கலவைச்சந்தனத்தைப், போதும் போதும் என்று சொல்லும் வரையில் சிதம்பரநாத முதலியார் தம் கையாலேயே அவ்விருவர்களுக்கும் பூசி, மற்றவர்களுக்கும் கொடுத்து, நல்ல சுருள்பாக்கும் வெற்றிலையும் கொண்டுவந்து வைத்தார். சாலீவாடீசுர முதலியார் தமக்கு நடக்கும் உபசாரங்களைக் கண்டு, பரமஸந்தோஷத்தை யடைந்தவராய், "நாங்கள் மூன்றரைமணி வண்டிக்கே புறப்படவேண்டும். அப்போதுதான் நல்லவேளை, அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து எங்களை யனுப்பவேண்டும்" என்றுசொல்லச் சிதம்பரநாத முதலியார், "அப்படியே. மூன்றுமணிக்கே வண்டி கொண்டுவரச் சொல்லுகிறேன். இன்னும் இரண்டுநாள் இருந்துவிட்டுப் போகலாம் : அப்புறம் நல்லநாளாக இல்லை யென்று சொல்வதால், நான் தங்களை நிர்ப்பந்தித்தற்கு முடியவில்லை. நல்லது, தாங்கள் கொஞ்சம் சிரமபரிகாரம் பண்ணிக்கொள்ளுங்கள்" என்று சொல்லி நல்ல விரிப்புக்களைக் கொண்டுவந்து போடவே, அவ்விருவரும் சிறிதுநேரம் அதிற் படுத்து நித்திரை செய்தார்கள்.

"இனி இவன் உங்கள் பையன்."

மூன்றடித்ததும் வண்டி தயாராக வந்துவிட்டது இதற்குள் சிதம்பரநாத முதலியார் தம் மருமகனுக்கு வேண்டிய சில சாமான்களை வாங்கிக்கொடுத்துப் பிரயாணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தார். சாலிவாடீசுர முதலியார் நித்திரை தெளிந்து எழுந்திருந்தும், "ஊருக்குப்போய் வர அனுமதி கொடுக்கலாமல்லவா ?" என்றதும், "சரி, இஷ்டம்போற் செய்கிறது. இரண்டாம் வேளைக்குச் சிறிது ஆகாரம் பண்ணிக்கொள்ளுங்கள்" என்று சிதம்பரநாத முதலியார் சொன்னார். 'ஒன்றுமே வேண்டாம். இன்னும் நாலுநாளைக்கு எங்களுக்குப் பசிக்காது' என்று அவர்கள் என்னசொல்லியும் கேட்கவில்லை, பிடிவாதமாக, ஏதாவது சிறிது சாப்பிடத்தான் வேண்டுமென்று கட்டாயப் படுத்தினதின்மேல் அவர்கள், கொஞ்சம் காப்பியை மாத்திரம் சாப்பிட்டுவிட்டுப் பிரயாணப்பட்டார்கள். சிதம்பரநாத முதலியார் தம் மருமகப்பையனை யழைத்துச் சாலீவாடீசுவர முதலியாரிடம் ஒப்பித்துத், "தந்தை நாதனித் தாயும் நீயிவர்க்-கெந்தை தந்தனன் இயைந்த செய்கென்றான்" என்று சொல்லித் தசரத சக்கரவர்த்தி ஸ்ரீராமபிரானை விசுவாமித்திர மகரிஷியுடன் அனுப்பியதுபோல "இனி இவன் உங்கள் பையன். சிறிது ஏறத்தாழ நடந்தாலும் கண்டித்து நல்ல ஸ்திதிக்குக் கொண்டுவந்து வைக்கவேண்டிய கவலையும் பொறுப்பும் தங்களைச் சேர்ந்தது. அதிகஞ் சொல்வதற்கில்லை" என்று சொல்லி அவர்களோடுகூடவே ரயிலடிக்குச் சென்று அவர்களைப் பிரயாணப்படுத்தி அனுப்பினார்.

III

"அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையு நாட்டும்—உறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியினூங் கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை."

'வரப்போகிற மருமகப்பிள்ளை.'

மறுநாட் காலை எட்டரைமணிக்கு வண்டி திருநெல்வேலிப் பாலம் போய்ச்சேர்ந்தது. சாலிவாடீசுர முதலியார் தம்மோடுகூட வந்தவரைப்பார்த்துப் பெட்டி படுக்கை முதலிய சாமான்களை எடுத்துவரச் சொல்லிவிட்டுத் தாம் நிமிஷமுந் தாமதஞ்செய்யாமல், நல்லசாமியை யழைத்துக்கொண்டு, தங்களுக்காக வெளியேவந்து காத்துக்கொண்டிருந்த அழகிய பெட்டி வண்டியிலேறித் தெற்குரதவீதியிலுள்ள தங்கள் வீட்டிற்கு வந்து சேர்ந்தார். வண்டியைவிட்டுக் கீழே யிறங்கியதும் காந்திமதிநாத முதலியார் வாசற்படியண்டை வந்து நல்லசாமியைப்பார்த்து "தம்பீ, வா. ஊரில் எல்லாரும் க்ஷேமமாக இருக்கிறார்களா?" என்று க்ஷேமம் விசாரித்தார். நல்லசாமியும் தக்கபடியாக விடையளித்துவிட்டு முதலியாரையும் அவர் மனைவியையும் மற்றும் அங்கிருந்த பெரியோர்களையும் நமஸ்கரித்துவிட்டு ஒதுங்கி நின்றான். பையனது குணத்தையும் அடக்கத்தையும் பார்த்து, எல்லாரும் ஆச்சரியப்பட்டார்கள். வரப்போகிற மருமகப்பிள்ளை யெப்படி யிருப்பானோ தெரியவில்லையே என்று ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருந்த முதலியாரது மனைவி அப்பையனைக் கண்டதும் கரைகடந்த சந்தோஷத்தை யடைந்து, அவனிடத்தில் அபிமானம் பாராட்டி அவனை உள்ளே அழைத்துக் கொண்டு போய்ப் பாலும் பழமும் கொடுத்துச் சாப்பிடச் சொன்னாள் ; தலையைத் தைலம் தடவி வாரி முடித்துப்

பிச்சிப்பூவைக் கொண்டுவந்து சூட்டினாள். இம்மட்டோ? பெட்டியைத்திறந்து விலையுயர்ந்த கடுக்கனை யெடுத்துப் பையனது காதிலணிந்தாள். மாப்பிள்ளை யென்ற அபிமானம் அப்பொழுது தொடங்கியே உண்டாகிவிட்டது. மனைவிக்குண்டாகிய அபிமானத்தைப் பார்த்து முதலியார் பரமானந்தமடைந்தாரென்பது சொல்லவும் வேண்டுமா?

### பகவான் திருவருள்.

அடுத்த சோமவாரத்தன்று ஒன்பது மணிக்குமேல் நல்ல வேளை பார்த்து, நல்லசாமியைப் பள்ளிக்கூடத்திற் சேர்க்க வேண்டுமென்ற கருத்துடன், காந்திமதிநாத முதலியார் அப்பையனையும் அழைத்துக்கொண்டு இந்து காலேஜை நோக்கிப் புறப்பட்டார். பத்தடி தூரஞ் சென்றதும் இரண்டுபேர் பிராமணர்கள் எதிர்ப்பட்டு, "சாஸ்திரிகளே நான் சொல்லுவதைக் கேளும். பையனை ஏழையென்று பார்க்கவே வேண்டாம். தைரியமாய்ப் பெண்ணைக் கொடும்; ஏழை பணக்காரனாகிறதற்கும் பணக்காரன் ஏழையாகிறதற்கும் எத்தனை நாள் செல்லும்? குலங்கோத்திரம் நன்றாயிருக்கிறது. கண்ணுக்கு ராஜவடிவாயிருக்கிறான். சின்னஞ்சிறுபிள்ளை. குணசாலி. படிப்பில் வெகு துடியாயிருக்கிறான். அரை நிமிஷம் புத்தகத்தைக் கீழே வைக்கிறதில்லை. நாலைந்து வருஷத்திற்கெல்லாம் பெரிய ஹைகோர்ட்டு வக்கீலாக வந்துவிடுவான். நீர் ஒருவர் பேச்சையுங் கேளாமல் பெண்ணைக் கொடுத்து விட்டு மறுகாரியம் பாரும்" என்று தம்முட் பேசிக்கொண்டுவந்தார்கள். முதலியார் அவ்வார்த்தைகளைக்கேட்டு, "நம்மை நோக்கிப் பகவான் இந்தப் பிராமணர்முகமாகக் கட்டளையிடுகிறாரே தவிர வேறில்லை" என்று நிச்சயித்து அதிக ஸந்தோஷமடைந்தவராய் அப்பையனை யழைத்துக்கொண்டு போய் இந்துகாலேஜில் நான்காவது பாரத்திற் சேர்த்துச் சம்பளம் முதலியவைகளையும் கொடுத்து விட்டு வந்தார்.

### "முயற்சி திருவினையாக்கும்."

நல்லசாமியும் அன்றுமுதல் ஒழுங்காகப் பாடசாலைக்குப்போய்க் கவலையுங் கருத்தும் வைத்துத் தன் பாடங்களைப் படித்துவந்தான். கலாசாலைக்கு நேரங் கழித்துப் போதல், போகாமல் நின்றுவிடுதல், வகுப்பிற் சந்தடி செய்தல், உபாத்தியாயர் பாடஞ்சொல்லும் போது பராக்கா யிருத்தல், கெட்டபிள்ளைகளோடு நட்புச் செய்தல் முதலிய துர்க்குணங்கள் எதுவும் நல்லசாமியிடத்திற் காணப்படவில்லை. நாள் தவறாமல் குறித்த நேரத்தில் பள்ளிக்கூடஞ் சென்று மிகவும் அமரிக்கையாய் உபாத்தியாயர்க்குக் கீழ்ப்படிந்து, அவர் சொல்வனவற்றைக் கவனமாய்க் கேட்டு ஞாபகத்திலே வைத்தும், முக்கியமான அம்சங்களைக் காகிதத்திற் குறித்துக்கொண்டும், தெரியாதவைகளைக் கேட்டுத் தெரிந்தும், தனக்குத் தெரிந்தவற்றை மற்றப் பிள்ளைகளுக்குச் சொல்லியும் பாடங்களைச் செவ்வையாகப் படித்து வந்தமையால், நல்லசாமியினிடத்தில் உபாத்தியாயர் முதலிய எல்லாருக்குமே பிரீதியுண்டாயிற்று. சனி ஞாயிறு முதலிய விடுமுறை நாட்களை நல்லசாமி மற்றைப் பிள்ளைகளைப்போலச் சோம்பேறியாய் வீணிற் கழிப்பதில்லை. பழம்பாடங்களைச் சிந்தனை செய்வதிலும், வீட்டிற் பார்க்க வேண்டிய கணக்குக்களைப் பார்ப்பதிலும் செலவழிந்த காலம் போக, மற்றைக்காலங்களையெல்லாம் ஆலய வழிபாட்டிற் செலவழித்து வந்தான். இத்தனை காரியங்களுக்கு மிடையே நமது நல்லசாமி, முதலியாரின் புத்திரியாகிய சிவபாக்கியத்திற்கு நன்றாக எழுதப் படிக்கத் தெரியும்படி கல்வி கற்பித்துக்கொண்டும் வந்தானென்றால், நாம் அவனது விடாமுயற்சியையும், சுகுணத்தையும் பற்றி என்ன சொல்வது! அதிசீக்கிரகாலத்தில் 'நல்லசாமி' என்று பெரியோரிட்ட பெயரைக் காரணப்பெய ரென்னும்படி செய்துகொண்டான். காந்திமதிநாத முதலியாருக்கும் அவரது மனைவி முதலிய மற்றையோருக்கும் நாளுக்குநாள் நல்லசாமியினிடத்தில் அதிகமான பிரீதி யுண்டாயிற்று.

---

We have, as promised in our letter of the 10th instant to the press, sent a marked copy of the *Vivekachintamani* containing our views on the important question of Rural Education to all educational officers and others in charge of Elementary Education, as well as Honorable Members of Council who are interested in finding a satisfactory solution of this problem; and we re-print a review of the article on Rural Education that appeared in the October issue for the information of those whose knowledge of Tamil together with the pressure of business on their time, will not permit of their reading and grasping the points therein presented for consideration.-*Ed.*,—"*V.C.*"

### A Review of the Article in the "Vivekachintamani."

The October issue of the *Vivekachintamani* opens with an Article on the Reform of Rural Education in which the Editor passes in review the present system of Elementary Education in schools and the waste resulting therefrom. It has been said that Children form the greatest wealth and asset of a nation and this truism is trebly more correct at the present juncture when the blood of the adults are being poured like water in sea and land.

'The people' form one of the four chief constituents of the 'State' and their officiency is therefore one of the important factors on which the efficiency of the State depends. From this necessity of "efficiency" of the people in the well-being of the State, he proceeds to classify the life of the people as "Country-life and City-life," giving the chief characteristrics that distinguish them. He then draws attention to the education "suited for country-life" and that "suited for city-life," there being no good done to the country-people by the "inefficient system of education" that is now imparted in all elementary schools throughout the Presidency, deducing the same from observations made by himself as well as those in charge of Elementary Education. He then draws pointed attention to the importance of "the letter and the spirit" in the teaching of Children and exposes the defects of "Cramming" and of a purely intellectual system of training unrelieved by a corresponding cultivation of the heart which is the true basis of moral power and growth of character. He also asserts and illustrates the dictum of Emerson that "Intellect is a whore' and gently passes on to a consideration of "Village Life" as "the basis of national-life" and of the true prosperity of the country.

He then refers to the waste of life which the present inefficient system of Education produces in rural-life and the resort more and more to town-life which is detrimental to the true interests of the people as well as of the country. He alludes in passing to the Hon'ble Sir C. Sankaran Nair's grasp of the Problem as evidenced by his published writings and pronouncements on Education and urges the importance of reforming Rural Education so as to place "Village-life on a sound and self-contained basis. He has himself worked for many years in the field maintaing an Agency for the Diffusion of knowledge these 25 years and "has done much practical work" through that Agency "and by means of his excellently conducted periodical, *the "Vivekachintamani."*—so well acknowledged by the public and by the late Mr. Henry Beaucahamp who as long ago as 1898, considered him to have established a claim to make his voice heard" in matters invelving "the promotion of a deeper and wider knowledge of the indigenous languages of the people in this part of India." The writer has now worked for 30 years in the field of Vernacular literature and to his experience therein gained has brought to bear on the subject, the result of ten years of continued work in Social Service.

The late Mr. Justice Ranade of Bombay with his mature experience and judgment of work done in the same field wrote to say that Mr. Swaminathaiyar has practically carried out the suggestion which the leader-writer in the *Madras Mail* made in reviewing his essays on "Vernacular Studies in Madras" first published in 1898, and he added: "you will have to be disappointed of the result of that experiment, but as I have already written to you, such disappointments are inevitable. You should make another experiment under more favourable circumstances. I feel sure you will succeed."

That opportunity which he was so long waiting for, arrived, he thought, when the Hon'ble Mr. Stone, now Director of Public Instruction, advised him to convert the magazine again into a school-journal promising that he "will do all in his power to help it forward to attain its former position among schools." We recently noticed in our columns the appeal issued by the Educational Committee of the Children's Movement and we now understand that the supply of copies of the journal to schools has been recommended by educational officers of the Department. It now remains for the Local Bodies and Managers of aided institutions to make up their minds to supply every one of the Elementary and Lower Secondary Schools under their control with a copy of the *Vivekachintamani* and thus help the Editor in pushing his present work through to success. We understand that the Editor has pledged his word to give up the support the journal was enjoying from the

general public for years in order "to minister solely to school boys" as it was suggested to him and we trust that he will not be made to suffer for his faith in a cause to which he has consistently devoted himself for 30 years, giving the best part of his life, time and talents in the service of it which has few of the attractions of worldly life and demands an amount of self-saficing labour which the ascetic spirit alone can well render and endure without loosing heart or hope.

## REFORM OF RURAL EDUCATION.

*To the Editor of the "Madras Mail."*

SIR,—I am sure that all good thinkers and true educationists will welcome the movement in favour of encouraging vernacular education which is being slowly recognised by practical administrators. In 1898 I contributed a series of essays on "Vernacular studies in Madras" to the *Madras Mail*, which attracted the attention of the then Governor of Madras, Sir Arthur Havelock, and all prominent educationists from Dr. Miller downwards. It was republished in pamphlet form. The views therein set forth have now been accepted by Sir Harcourt Butler from his place in the Viceroy's Council, and his successor in office, I have reasons to believe, attaches the greatest importance to the reform of rural education. I am devoting the current issue of the *Viveckachintamani* to the question of rural education, and am giving therein some thoughts and reflections" which occurred to me in the light of my thirty years' work in the field of vernacular iterature..

In this connection I desire to draw the attention of the public to the pronouncement of the Dewan of Travancore, whom I interviewed some months ago and who, I am glad to learn, has not allowed the grass to grow under his feet. Replying to an Address of Welcome presented by the people of Paravoor he is reported to have said:—"It is very important that people should appreciate the actual bearing of this momentous question in all respects. All over India there is a new sense of responsibility felt towards the vernaculars. The national consciousness has been awakened; the public have been roused to the extreme urgency of giving greater prominence to vernacular education." This in no way deprecated the importance of English education, but the enlightenment and uplift of the masses must come and can be effected only through the vernaculars. I wish this truth was realised and acted upon by those who are in immediate charge of Elementary education.

MADRAS,
*10th November* 1915. } C. V. SWAMINATHA IYER.

## REFORM OF RURAL EDUCATION.

*To the Editor of the "Hindu."*

SIR,—In July 1913 I wrote a letter to the *Hindu* recording the thoughts which occurred to me on the question of "Vernacular study and composition" which was then vigorously discussed in your correspondence column. I therein summarised in brief my views on "popular vernacular literature" and remarked: "my views thus expressed 15 years ago, I see no reason to change in spite of the multiplication of books which I see and welcome as a sign of the times but which is not yet sufficiently developed to form a sign of 'healthy growth.' For, most of the young writers are poor in thought, poorer in the method of giving expression to what little they are able to think." Since then, I have been actively engaged in diagnosing the defects in the present system of Indian Education and the conclusion I have come to has been confirmed by no less an authority than the late able Secretary of the S. I. Teachers' Union, whose remarks it will be interesting to quote here:

"I am glad that you have made a correct diagnosis of the defects in the present system of Indian Education. In spite of the many improvements that have recently been made, it has to be said with regret that there is still a good deal of the forcing in of the so-called knowledge-matter, instead of the drawing out and invigorating of the faculties of children by cultivating their observation in new field of God's glorious work."

This system of "forcing in" is particularly disastrous in its results on the children of rural population, whose natural powers of observation are dulled by the grinding in of indigestible stuff which passed muster for "knowledge," the word "practical" added to it being merely an embellishment, as no "knowledge" which the mind cannot grasp and assimilate can have any the least-practical effect on the life of the child. I therefore resolved to devote myself to the question of child education and on the promise of help given to enable me reach all

the Elementary and Secondary Schools in Tamil Districts, I took the pledge of giving up the support which the *Vivekachintamani* for years was enjoying from the general public with a view "to minister to the school boys entirely." I have since travelled to some extent and observed much as to what is being done in the name of Elementary Education in rural parts. As you are aware, Sir, I am one of those who do not believe in destructive criticism, though it has its own value on occasions. What we want is constructive talent—to take up things as they are and set about reforming them so as to bring them within the scope of those divinely operating Laws of Nature which govern all healthy growth. In this constructive work we need the co-operation of all.

"The work of educating the masses" as I at first observed and have since been repeating again and again, "is such a large one that it could not be satisfactorily performed either by the Government or the educated classes working alone. It is a gigantic work which would absorb all the energies and resources of both the Government and the educated classes; and therefore, what little of these, either of them could bring to it should be utilised in a cordial spirit of mutual help and co-operation, so that as little of the energies and resources employed for the prupose may be wasted as possible."

It is with this firm conviction of the needs of the situation, I readily took the pledge demanded of me, thereby placing myself materially to some extent at the mercy of those who are in actual charge and control of Elementary and Lower Secondary Education, relying however on the pledge of active support that was given by the head of the Educational Department.

It is not an easy thing to retrace one's stens and the science of tacties will teach any one who has carefully studied it that in any "forward movement" (of whatever kind it may be) it is far more costly and disastrous to retrace one's steps than to stick to one's position and fight to maintain it to the last.

Having therefore converted the magazine into a school journal and pledged myself to work for school-children, it has become my bounden duty to carry on my work to the last; and though the resources and energies employed for the purpose are to a large extent wasted by the apathy and indifference of those in immediate charge of ElementaryEducation and the divided authority which pervades all through the rank & file, I feel greatly strengthned in spirit by the consciousness that the work is one which has to be done at any cost

I am therefore glad to notice the pronouncement of the Dewan of Travancore on "Vernacular Education" which appeared in the telegraphic columns of the *Hindu* last night (9th) and I write this to say that I am devoting the current issue of the *Vivekachintamani* to elaborating in Tamil the few thoughts and reflections which occurred to me as the result of my practical experience in the work of educating the masses for a quarter of century now.

I hope to be able to send you Sir, and to all interested in solving the knotty problem of Rural Education an advance copy of the current number for the expression of their views thereon ; but I cannot let slip the present opportunity of calling prominent attention to the hold that the important question of Vernacular Education is taking on the minds of practical administrators and statesmen. My views which I put forth in 1898, have now found acceptance in the highest counsels of the realm. Sir Harcourt Butler from his place in the Viceroy's Council and the Hon'ble Mr. Sharp, the Able Educational Secretary, have both given expression to their views which practically endorse what I said 20 years ago. But it has to be remembered that "the question has a social as well as an educational side to it" and mere "experts" are apt to forget this. Dewan Bahadur M. Krishnan Nair has hit the nail on the right head when he said that "the national consciousness has been roused," and it demands a correct and immediate solution of the problem of Vernacular Education no one can deny. But this can never be done without a proper reform of Rural Education of which more anon.

MADRAS,
10th November 1915.

C. V. SWAMINATHAIYAR,
*Editor of the Vivekachintamani.*